உ

ஸ்ரீ சற்குருவே நம:

# மெய்யறி விளக்கம்.

இது

திருவண்ணுமலையில் எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ சற்குருஸ்வாமிகளால்

இயற்றப்பட்டு

ஷெ ஸ்வாமிகளின் மாணுக்கர்

பரவக்கரை

மாரிமுத்தாபிள்ளை அவர்களால்

கும்பகோணம்

ஸ்ரீ கிருஷ்ண விலாஸ பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

விலை.] 1922. [அணு 12.

உ

ஸ்ரீ சற்குருவே நம:

# மெய்யறி விளக்கம்.

இது

திருவண்ணமலையில் எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ சற்குருஸ்வாமிகளால்

இயற்றப்பட்டு

ஷெ ஸ்வாமிகளின் மாணக்கர்

பரவக்கரை

மாரிமுத்தாபிள்ளை அவர்களால்


கும்பகோணம்

ஸ்ரீ கிருஷ்ண விலாஸ பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

விலை.] 1922. [அணு 12.

உ

ஸ்ரீ சற்குருவேநம:

# மெய்யறி விளக்கம்.

## காப்பு.

ஆதிகுரு நாதனருள் ஆனைமுகபாலன் காப்பாம்.
பூமிமுதல் நாதமுடி பூதங்களைந்துங் காப்பாம்.
நாதமுடி வானயோக குருபாதங் காப்பாம்.
மூவர்கள் முனிவர்களும் மூவுலகெங்குங் காப்பாம்.
வேதமுறை வேதியரும் வேதாந்திகளுங் காப்பாம்.
வாதமுறை யாரும்பல சித்தர்களுங் காப்பாம்.
மெய்யறி விளக்கமிதின் மேல்மனசாந்தங் காப்பாம்.
துய்யமலை துரியநிலை யருளும் பொருளுங் காப்பாமே.

ஓம் ஸ்ரீ குருபாததீர்த்த கெங்கே பவானி புவனேஸ்வரி
மனோன்மணி அருள்மோதநீ
பரபோதநீ பதநிநீயெங்குமா யாரு
யெழுந்தருளு மானந்தவெள்ளமே
வாணியே சரஸ்வதி நாராயணி சிவே பார்வதி
பகவதி பரமானந்தசுந்தரி
உன்மகிமை யுன்னடிமை எவ்வுயிரு மாகையா லுன்னடியி
லன்புட னஞ்சலிசெய்குவாம்.

## குரு வணக்கம்.

மெய்யறி விளக்கமென்றும் வேதமுடிவான நாதம்
கைவிரற் காட்டியென்னைக் காத்தகுரு பாதம்போற்றி
பொய்ப்பொறி புலன்கள்பத்தும் காரணங்கள்நான்கும் நீக்கி
கைலைமலை நிலைவாழும் ஸ்ரீ குருதெக்ஷணாமூர்த்தியே நம:.

## நூல்.

அனாதிகாலம் ஜெனனமரணதுன்பத்திற்கேதுவான சம்சாரசாகரத்திற்பட்டுக்கெட்டலைந்தும் பூர்வபுண்ணிய பரிபாகத்தினால் ஒரு ஜென்மத்தில் தெய்வவசத்தால் மனம் மெய்யறிவையடுத்து அனேகநாள் பாதுகாத்துப்பணிவிடை செய்துப்பழகிவரவே, ஒரு நாள் ஏகாந்தத்தில் அந்த மெய்யறிவை வணங்கிக்கேட்கிறது.

ஓ சுவாமி! உண்மைஞ்ஞானவிளக்கமாவது யாதென்று வினவ அறிவுகூறியது.

ஓ மனமேகேள்! உண்மைஞ்ஞானவிளக்கமென்பது பரிசுத்தமான வேதாந்தநிலை. அந்த உண்மைஞ்ஞானவிளக்கமறியும்பொருட்டு முதலாவது நான்கு வேதத்தின் சொரூபத்தை நன்றாய்ப்பார்த்துக் கண்டறியவேண்டும். அங்ஙனம், வேதசொரூபத்தைப் பாராமலும்அதன் பொருளைத்தெரியாமலும் அந்தப்படி நடவாமலும் எப்படி வேதாந்தமடையக்கூடும். ஏனென்றால் நான்குவேதங்களுக்கும் ஒழிவிலொடுக்கமாவது வேதாந்தமென்றுமறிகவேதத்தின்சொரூபமாவது யாதென்று மனம்வினவ அறிவுகூறியது.

ஓ மனமே கேள்! வேதத்தின் சொரூபமறிவது மகாப்பிரயாசம் ஆனாலும், ஒரு சற்குருவையடுத்து அன்புற்று சேவித்தருள்பெற்றால், அந்த வேதத்தையும் அந்த வேதத்திற்கதீதமான வேதாந்தத்தையும் விபரமாய்ப்பார்க்கக்கூடியதுமாமென்றறிக. ஓ மனமேகேள்! இன்னும் நான்கு வேதமும் சப்தப்பிரமாணங்களாம். அதானது, இந்திரியங்களினாலும், மனத்தினாலும், சரீரத்தினாலும், கிரகிக்கத்தகுந்ததுமாம். அந்த சப்தப் பிரமாணமான வேதத்தின்சொரூபமாவது பூமி முதல் நாதம்வரையிலுள்ள நாமரூபாதிசர்வப் பிரபஞ்சவஸ்துக்களுமாமென்றறிக. இதுகளுக்கெல்லாம் அந்தரியாமியாயும், ஏகமாயும், பரிபூரணமாயுமுள்ள பரமாத்மாவையறிவதாம் உண்மைஞ்ஞானவிளக்கம். அங்ஙனம் உண்மைஞ்ஞானவிளக்கம் விளங்கவொட்டாமல் மறைக்கப்பட்ட வஸ்து யாதெனில் முன்கூறிய வேதம் நான்குமாம். அந்த வேதமானது ஞானம், பக்தி, கர்மம் இந்தப்படி மூன்று காண்டமாயும் புருஷார்த்தமாயும் போகார்த்தமாயுங் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால், அந்தமார்க்கத்திலிருந்துந் தவராமல் கிரமமாய் மேலேறி நான்தவேதத்தையும் உபசங்காரஞ்செய்து நாலுவேதத்திற்கும் மூன்று குணத்திற்கும் அந்தமான 'தத்துவமசி' என்கிற நான்கு மகாவாக்கியத்தின் பொருளை ஆசாரியரின் மூலமாயருள் பெற்றால் வேதாந்தமான உண்மைநிலையையடையலாம். சந்தேகம் வேண்டாம்.

ஓ சுவாமி! முதலாவது, வேதத்தின் சொரூபமறிவதே மகாப்பிரயாசம். ஆனாலும், சொரூபத்தின் விபரந்தெரியாமற்போனாலந்த சொரூபத்தை எப்படித்தியானிக்கக்கூடும்? தியானநிஷ்டை இல்லாமற்போனால் எப்படி சித்தியடையக்கூடும்? அதுபோல் வேதத்தின் சொரூபந்தெரியாமல் அதை எப்படி உபசங்காரஞ் செய்யக்கூடுமென்றும் மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சராசரப்பிரபஞ்சவஸ்துக்கள் வேதத்தின்சொரூபமாமென்றும், இதற்கு சர்வாந்திரியாமியாயிருந்ததும் சர்வசாக்ஷியுமாயிருந்ததும் வேதாந்தம். இதை நீ உண்மையாயறிந்தால் உன் சரீரமும் வேதமல்லவா? ஆதலால், உன்னிடத்தில் ஒரு பெரிய மலைபோலிருக்கும் நான் என்கிற அகங்காரமான கட்டையை உண்மைக்ஞானவிளக்கமென்கிற பெருந்தீயினாற் சுட்டுச்சாம்பலாக்கினால் வேதமேது? வேதமில்லாவிட்டால் வேதாந்தமான உண்மைக்ஞானமெய்விளங்கும்.

ஓ சுவாமி! இந்தப்படி அகங்காரத்தைக்கொல்வதெப்படி என்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அகங்காரத்தைக்கொல்வது மகாப்பிரயாசம். ஆனாலும், ஒரு சற்குருவையடுத்து நான்கு சாதனைகளையும் அடைந்தருள்பெற்றால் அகங்காரம் அடியோடே நசிக்கும். சந்தேகம் வேண்டாம்.

ஓ சுவாமி! நான்கு சாதனையாவது யாது? அதையடையும் மார்க்கமாவது யாதென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! நான்கு சாதனங்களில் முதலாவது மனம் கர்மபந்தம்விட்டு நித்தியானந்தமாயுள்ள மோக்ஷத்தை அபேக்ஷிப்பதாம். இரண்டாவது, இகபரபோகத்திலுள்ள வைராக்கியம். மூன்றாவது, நித்தியாநித்திய விவேகம். நான்காவது, சமாதியாறுமடைவதாம். இந்தப்படி நான்கு சாதனையும் பெற்று ஆணவாதிமும்மலங்களும் நீக்கினால் அருள் பெறலாம். அருள்பெற்றால், அகங்காரம் நசிக்கும். அகங்காரம் நசித்தால் சின்முத்தனாகும்.

ஓ சுவாமி! வேதத்தின் சொரூபமானது தேகப்பிரபஞ்சவஸ்துக்களும் அதற்கனுசாரமான குணதர்மகர்மங்களுமாம். பிராணிகளிற் பிரதானம் மானிடசரீரம். சரீரமானது தொண்ணூற்றாறு தத்துவங்கள். தத்துவங்களிற் பிரதானம் மனம். மனம் சுத்தமானால் அருளடையலாம். ஆதலால், இந்த தொண்ணூற்றாறு தத்துவங்களுடன் கூடிய இந்தச்சரீரத்தில் மனம் பிறந்தவிடமெங்கே? இதற்கிருப்பிடமெங்கே? ஒடுக்கமெங்கே?

மனதையடக்கவேண்டிய குருவும், அருளும், பொருளுமிருக்கும் ஸ்தானம் யாதென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! இந்தச்சரீரம் மொத்தந் தொண்ணூற்ருறு தத்துவங்களுண்டு. அதுகளிற்பிரதானம் ஆறுதத்துவம். அதற்குஸ்தானமாவது ஆருதாரம். அதில் முதலாவது, மூலாதாரம். இரண்டாவது, சுவாதிஷ்டானம். மூன்ருவது, மணிபூரகம் நான்காவது, அனுகதம். ஐந்தாவது, விசுத்தி. ஆருவது, ஆக்ஞை. இந்த ஆறு ஆதாரங்களிலுங் கிரமம் கிரமமாயும் பிரதானமாயும் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் ஆறுமூர்த்திகளுண்டு. அதாவன:- மூலாதாரத்தின்கண் மூலக்கணபதியும்; பல்லபசத்தியும்; சுவாதிஷ்டான நிலையில் பிர்மாவும் சரஸ்வதியும், மணிபூரகத்தின்கண் மகாவிஷ்ணுவும் ஸ்திரீதேவியும்; அனுகதத்தில் ருத்திரமூர்த்தியும் ருத்திராணியும்; கண்டஸ்தானத்தில் மகேஸ்வரனும் மகேஸ்வரியும்; ஆக்ஞாசக்கரத்தில் சதாசிவனும் மனோன்மணியுமாம். இதுகளுக்கெல்லாம் பிரதானமானது ஜீவனும் மனதுமாம். இதுகளிரண்டில் ஜீவன் நிர்விகாரியாதலால் அதற்கிறப்பும் பிறப்புமில்லை. மனதிற்குத்தான் பிறப்புமிறப்புமுள்ளதாய்த்தோன்றுவதென்றறிக. மனம் லயமானுல் ஒன்றுமே இல்லை ஆனுலும் மனம்பிறந்தவிடம் முன்கூறிய மூலாதாரம். அதற்கு சுபாபமாயிருப்பிடம் சுவாதிஷ்டானநிலை. அதானது, சிருஷ்டி கர்மம். இதற்கு ஒடுக்கம் தன்னுள்ளம். உள்ளமென்பது ஆக்ஞாசக்கரத்தின்கண் அதற்குள் குருவும் அருளும்பொருளும் சமரசமாய்ப் பரிபூரணமாய் நிறைந்திருக்கப்பட்டவிடம். ஆதலால், முன்கூறிய சுவாதிஷ்டானநிலையையடைந்து ஸ்திரீபோகாதி விஷயங்களில் ஆசையுடையவராய் காமியகர்மங்களைச்செய்யும் அசுத்தமான மனதிற்கு மேற்கூறிய பிர்மசபையாயிருக்கிற உள்ளத்தில் நுழைவது மகாப்பிரயாசம். ஆதலால், குருவும் அருளும் பொருளும் தெரியாமல் அந்தகாரப்பட்டு ஆசாபாசத்திற்சிக்கி வீண்காலம் போக்கித் தலைகீழாய் வந்து நரகத்தீயில் விழுவார்கள்.

ஓ சுவாமி! இந்தப்படி குருவருளும் பொருளும் தன்னிடத்திலிருக்கத் தனக்குத்தானே அந்த அருள்பெற்றுப்பிர்மானந்தமாயிருக்கக்கூடாதா, வேறொரு குருவைத்தேடவேணுமாவென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமேகேள்! தன்னைத்தான் மறந்திருக்கின்ற வஸ்துவைப்பார்க்கும்பொருட்டு வேறொரு குருவின் திருவருள்வேண்டியதவசியம். ஆனுலும் அனுதியான கர்மவாசனையோடு கூடி மூலாதாரததின்கண் பிறந்த மனமானது அந்த மூலாதாரத்தின்கண்ணிருந்தும் சுவாதிஷ்டான நிலையைப்பற்றி அனுதிகாலமாய் வந்த சேர்க்கைவாசனைப் பழக்கங்கொண்டு

சிருஷ்டிசெய்வதாதலால் ஸ்திரீபோகாதிவிஷயங்களிலும் ஆசைபெருகி அடிக்கடி தன்னைத்தான் மறந்து அசுத்தவாசனையடைந்து சித்தம் பரிசுத்த மில்லாமல் கெட்டலையக்காரணம்.

ஓ மனமே இன்னும் கேள்! மனமானது ஆகாயம்போல் சர்வவியாபகம். ஆனாலும், பரிசுத்தமில்லாமலும் சற்குரு பக்தி விஸ்வாசமில்லாமலும் தன் உள்ளம் போனால் அந்த மனதை உள்ளேவிடமாட்டாது. அல்லாமல் பலாத்காரமாயுள்ளே போனால் அரைநிமிஷமானாலும் தங்குகிறதற்கிடங்கொடாமல் பிடித்துத் தலைகீழாய்த் தள்ளிவிடும். சந்தேகமில்லை. ஏனென்றால், அது திருவுள்ளப் பிர்மானந்தமான சபையாதலால் அங்கே அசுத்தமுடையவர் போனால் உள்ளே விடமாட்டாது. ஏனென்றால் அந்த ஆசிரமத்தைப் பாதுகாத்து அனேகம் பகவத்பாரிஷாளுடைய சமூகம்சூழ்ந்திருக்குமிடமாதலால் தேகமே நித்தியம் போகமேசத்தியமென்றெண்ணும் பாபிகளையுள்ளேவிடமாட்டாதென்பது தாற்பரியம். இதைத்தவிர ராகத்துவேஷாதியபிமானம்விட்டு குருவருள்பெற்ற மகான்களுக்கெந்தவிடம் போனாலும் போகலாம். தடையில்லை

ஓ சுவாமி! குருவானவர் யார்? அவாளுடைய சொரூபமாவது அருளாவது யாதென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சராசரத்திற்கும் அந்தரியாமியாயும் சர்வசாக்ஷியாயுங் குணாதீதமாய்ப்பரிசுத்தமாய்ப் பரிபூரணமாயுமுள்ள சிற்சத்தியுடன்கூடி இரண்டறக்கலந்து சச்சிதானந்தசொரூபமாயும் விளங்கியிருக்கும் பிரணவ சொரூபமொன்றுதான் சற்குருவென்றறிக. இரண்டாவது, ஓ மனமே கேள். இந்தப்படி சூட்சமமாயிருந்த சற்குருவின் ஸ்தூலசரீரத்தையுங் கேள். சிற்சத்தியின் திருவவதாரமானது ஒரு மனுஷ்யரூபமாயும் அந்தப் பரிசுத்தமாயையில்அவதாரமெடுத்தும் பரம்பரையாயுள்ள மகான்களுடைய அருள்பெற்றும் எதார்த்தஞானத்தையடைந்த மகான்கள்தான் சற்குரு. இதுதான் குருவின் ஸ்தூலரூபமென்றறிக. இனி மூன்றாவது, குருவருளாவதுயாதெனில், சிற்றறிவையும் சிற்றின்பத்தையும் விலக்கி பேரறிவால் பேரின்பத்தை விளக்குவதாம். அங்ஙனம் எப்படியெனில் அசுத்தமாயும் சிற்றறிவாயும் அஞ்ஞானத்திற்கு மூலமாயுமுள்ள ஆணவாதி மும்மலங்களும் நீக்கி பரிசுத்தமாயும் பேரறிவாயுமுள்ள உண்மைஞான விளக்குவதாமென்றறிக.

ஓ சுவாமி! அங்ஙனம் ஏகமாயும் பரிபூரணமாயுமுள்ள சமரச சச்சிதானந்தசொரூபத்திலிருந்தும் பேதமாய்ப்பேரறிவென்றும்சிற்றறிவென்றும் இருவிதமாய் வந்தவாறு எங்ஙனமென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அங்ஙனம் வந்தவாறு அவித்தையின் சுபாவீக மென்பதல்லாமல் வேறில்லை. அவித்தையாவது யாதெனில்:—— ஏகமாயும், பரிபூரணமாயும் அபேதமாயுமுள்ள பரமான்மாவிலிருந்தும் தோற்றப்பட்ட சிற்சத்தியின் பிரகாசத்தினால் தோற்றுவதாம் இந்த சராசர பிரபஞ்ச வஸ்துக்களு மென்றறிக. அந்த சிற்சத்தியின் அம்ஸமாம் ஜீவன். அந்த ஜீவசத்தியானது ஏகமாயும் அரூபமாயுமிருந்த சிற்சத்தியொன்று தான். அந்த ஜீவசிற்சத்தியி லிருந்தும் அபாரமான நெருப்பில் அனேகந் தீப்பொறிகள் கிளம்பினாற்போல் அனேக ஜீவர்கள் பிறந்தன. அங்ஙனம் அனேகவிதமான ஜீவர்களுக்கெல்லாம் பூர்வவினைக்குத் தகுந்தபடி போகபோக்கியங்களை யநுபவிக்கும்பொருட்டு சகல அவயவங்களோடு கூடியும் அவித்தியா ரூபமாயுள்ள ஒரு அசுத்தமாயை பிறந்தது. அதுதான் இந்த உலகத்தின்கண் சராசரபிராணிகளுக்கும் சரீரமாமென்றறிக. இந்தப்படியுள்ள சரீரத்தில் ஜீவன் ஐக்கியமாய் போக்தாவாயிருந்தமட்டும் ஜீவர்களெல்லாம் சிற்றறிவுடையவர்களாயும் இப்படிக்கொத்த துர்ச்சங்கப்பழக்கமும் துர்விஷயங்களிலுள்ள பேராசையும்விட்டு நிராசையாய் சர்ச்சங்கப் பழக்கமும் மோக்ஷத்திலபேக்ஷையும் வந்தால் பேரறிவிளக்கமென்றும் மெய்யறிவிளக்கமென்றும் உண்மைஞ்ஞானநிலை என்றும் சுருதிப்பிரமாணங்களிலும் பெரியோர்களாலும் கூறப்பட்டுளது.

ஓ சுவாமி! இந்தப்படியுள்ள ஜீவர்களெல்லாம் தாபத்திரயாதி சம்சார துக்கங்களுக்கும் நரகத்திற்குங்காரணமான அகங்காரதுன்பம்அடிக்கடி எவ்வளவு வந்தாலும் அதை விட்டுவிடுவதும் பெரியதுன்பமென்றும் எண்ணுகிறேன். அது அப்படியிருக்க எப்படி மோக்ஷத்தை நம்புவதென்று மனம வினவ, அறிவு கூறியது

ஓ மனமே கேள்! மரணகாலமடுத்தத் தீராரோகிகளுக்கு எவ்வளவு நல்ல மருந்தும் நல்ல நல்ல வைத்தியர்களிருந்தாலும் ·பிரயோஜனங் கிடையாது. அதுபோல் பேராசையுடைய பாபிகளுக்கு ஞானோபதேசஞ்செய்தால் அதை நஞ்சைப்போல் எண்ணுவார்கள். உலகத்தின்கண் அஞ்ஞானிகளான ஜீவர்கள் அறிவுதான் பெரிதென்றும் அதல்ல மனந்தான் எல்லாவற்றிலும் பிரதானமென்றும் சொல்லிக்கொண்டு ஈனசம்சாரத்திற் கட்டுப்பட் டலைவார்கள். மனதையடக்கும் உபாயத்தையும் அறிவுக்குமறிவான அறிவை யறிவதுமாம் பேரறிவென்றும் மெய்யறிவென்றும் உண்மைஞ்ஞானவிளக்கமென்றும் பெரியவாள் சம்மதம்.

ஓ சுவாமி! சம்சாரிகள் வர்ணாச்சிரமத்திலிருந்துஞ் செய்யவேண்டிய கிரகஸ்தாச்சிரமம் யாது? அந்தக் கிரகஸ்தாச்சிரமத்திலிருந் துந்துறவரத் தாச்சிரம மடையும் மார்க்கம் யாது? அப்படியே துறவரத்தாச்சிரமத்தை

யடைந்தச்சாதுவின் நிலையாவது யாதென்று மனம் கேட்க, அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! வர்ணச்சிரம தர்மமாவது யாதெனில், சம்சாரிகள் இல்லறத்தில் வர்ணச்சிரம ர்மத்தோடு கூடியிருந்தும் பிராம்மணாதி சதுர் வர்ணங்களும் அவாளவாளுக்குடைத்த அதிகாரத்திற்குத் தகுந்தபடி நிஷ் காமமாய் நல்ல சத்கருமங்களைச்செய்யவும் பிதுர்தேவாதி சாதுக்களைப்பூசிக் கவும், பிராம்மணாள் வேதம்படிக்கவும், அதிகாரம்போல் கற்றுக்கொடுக்க வும், அதுபோல் நல்லவர்களைப்பார்த்து தானங்கொடுக்கவும், வாங்கவும், காலதேசாவஸ்தைக்குத் தகுந்தபடி எக்யஞ்செய்யவும், செய்விப்பிக்கவும் இந்தப்படியாறுகர்மங்களைச் செய்யும்பொருட்டுப் பிராம்மணஜாதிக்குள்ள அதிகாரம். இன்னும் மூன்றுசந்தியாகாலங்களிலும் சந்தியாவந்தனங் காயத் திரி முதலான ஜெபதபங்களைச்செய்யவும், இன்னும் பிராம்மணனுக் குடைத்தான சத்கர்மங்க ளனேகமுண்டு. அதுகளெல்லாம் சாதுக்களின் திருவடியில் நிஷ்காமமாய்ஈஸ்வரார்ப்பணஞ்செய்து சமார்ப்பணமாக்கவும் இந்தப்படியெல்லாம் பிராம்மணாள் செய்யவேண்டிய குலாசார தர்மமென் றும் வேதத்தின் பொருளை நன்றாயறிந்த மகான்களின் சம்மதம். இந்தப் படியுள்ள பிராம்மணாள் இல்லறத்திலிருந்துஞ் சாதுக்களின் பாதபூஜை செய்யவும், அங்ஙனம் எப்படியெனில் அதி வர்ணச்சிரமத்தையுடைத்த மகான்கள் தன்னிடத்திற்குவந்தால் அந்தக்கிரக்ஸ்தாள் சதிபுருஷாளிருவரு மாய் கூடி அந்த சாதுவை உபரியாயுள்ள ஓராசனத்திலுட்காரவைத்து அந்தமகாத்மாவினுடைய வர்ணச்சூாரகுல தர்மங்களைக் கவனிக்காமல் பிர்ம சைதன்னியத்தைப்பார்த்துத் திருவடியிரண்டும் விசாலமாயுள்ளவொருதாம் பாளத்தில் சேர்த்துவைத்தும் வலதுபாதம் புருஷனும் இடதுபாதம் மனை வியுமாகப் பிடித்துவைத்துக்கொண்டு, அனுமோதமாயிருவரும் ஈஸ்வர பக்தி விஸ்வாசத்துடன் நல்லசுத்தஜலங்கொண்டு பாதபிரக்ஷாளனஞ் செய் யவும், அந்த பாததீர்த்தமானதைக் கோடித்தீர்த்தமாய் நினைத்து அனுவள வும் பூமியிற்சிந்தாமல் சிரசிற்றறிக்கவும், பானஞ்செய்யவும், ஜலகெந்த தூப தீபாதிகளைக் கொண்டுப்பாதபூஜை செய்யவும், மாதுரியமாயுள்ள அன்ன பானாதிகளையூட்டிச் சந்தோஷிப்பிக்கச்செய்யவும், அந்த உச்சிட்டமானதை சதிபுருஷாளிருவரும் அமிர்தத்தைப்போற் புசிக்கவும்,இந்தப்படியெல்லாஞ் செய்துப் பழகிவருங் கிரகஸ்தன் சதிபுருஷா ளிருவருங்கூடிக் காமத்தாற் புணர்ந்த மகாபாபமெல்லாம் வேரோடே நாசமடையும், மோக்ஷத்திற்கும் வழியாகும். இந்தப்படியெல்லாஞ் செய்வதே பிராம்மணஜாதிக்கடுத்த இல்லறதர்மமென்றறிக. இன்னும்

ஓ மனமே கேள் ! முன்கூறிய கர்மத்தைத்தவிர சாதுக்களின் பாத பூஜை செய்யும்பொருட்டு மற்ற மூன்று வர்ணங்களுக்கும் அதிகாரமுண்டு

சாதுக்களிடத்தில் பக்தியுடையவன் சண்டாளஜாதியானாலும் அதிகார முண்டு. இந்தப்படி இல்லறத்திலிருந்து துறவறமடையுமார்க்கம் யாதெனில், முன்கூறியபடியுள்ள மகாத்மாவாயும், அதிவர்ணாச்சிரமியாயும் உள்ளவொரு குருவையடுத்து வர்ணாச்சிரமாதி குலாச்சாரதர்மங்களும், விதி நிஷேதாதி குணதோஷங்களுந், தர்மாதர்மங்களுந் தூரத்தள்ளிவிட்டுத் தன்னுடல், பொருள், ஆவி, மூன்றும் ஸ்ரீசற்குருவின் திருவடியிற் றாரைவார்த்துப் பாதுகாத்துப் பலநாள் பணிவிடைசெய்துப் பழகிவருவதானால் அதிவர்ணாச்சிரமத்தை யடையலாம். சந்தேகம் வேண்டாம். இனி யதிவர்ணாச்சிரமமாவது யாதெனில், நான்கு சாதனங்களுமடைந்து, மும்மலங்களுமற்று ஸ்ரீசற்குருவின் திருவருட்பெற்று, அபேதமாயும் நிர்மலமாயும், நிர்க்குணமாயும், பரிபூரணமாயும், பிர்மானந்தமாயுமிருக்கும் மகான்கள் தான் அதி வர்ணாச்சிரமிகளென்றுமறிக.

ஓ சுவாமி! அனேகமான ஜனனமரணத்துன்பங்களுக் கேதுவான சண்டாள சம்சாரசாகரத்தைத் தாண்டி உண்மைஞ்ஞான பூமியையடையும் பொருட்டுச் சன்மார்க்கம் யாதென்று திருவாய்மலர்ந்தருளவேணுமென்று மனம் வினவ, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! முதலாவது, நானொரு சம்சாரியென்றவன் யாரென்றால், மாயாநிர்மிதமாயும், அசத்தாயும், அவித்தியாமானமாயும், அநித்தியமாயும், அசுத்தமாயுமுள்ள இந்தச்சரீரமொன்றுதான் நானென்பவன். அதுதான் சம்சாரி, அதுவாஸ்தவமல்லவென்றறிக. ஆனாலும், அப்படித் தோற்றுவதற்குக் காரணம் அகங்காரம். அகங்காரத்தினால் தோற்றுவது அபிமானம். அபிமானத்திற்கும் அகங்காரத்திற்கும் காரணம் அஞ்ஞானமாயுள்ள மனமொன்றேயாம். ஆதலால், சம்சாரக்கூட்டங்களிற் பிரதானம் மனமொன்றுதானென்று மறிக. ஆதலால், இந்தியரிங்கள் இருபதும் அந்தக்காரணம் நான்குமடங்கிவிட்டால், ஜனனமரணாதித்துன்பங்களுக்கேதுவான சம்சாரக் கூட்டமெல்லாம் அடியோடே நசிக்கும். சந்தேகம்வேண்டாம்.

ஓ சுவாமி இந்த தத்துவங்கள் இருபத்துநான்கின் சொரூபமாவதென்ன ? இதையடக்கும்பொருட்டு உபாயமெப்படியென்று மனம் கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! இந்த தத்துவங்களின் சொரூபமாவதென்னவெனில், மூலப்பிரகிருதியொன்று, மகத்தத்துவமொன்று, அகங்காரமொன்று, மனமொன்று, இந்திரியங்களிருபது, ஆக இந்த இருபத்துநான்குத் தத்துவங்களுமாமென்றறிக. அதானது, காது, கேள்வி, தோல்

ஸ்பரிசம், கண், பார்வை, நாக்கு, ரசம், மூக்கு, நாற்றம், வாக்கு, வசனம், பாதம், கமனம், கை, தானம், குதம், விசர்ச்சனம், உபஸ்தம், ஆனந்தம், மனம், சங்கற்பம், புத்தி, நிச்சயம், சித்தம், சஞ்சலம், அகங்காரம், அபிமானம் இந்தப்படி ஒன்றொன்றும் வேறோர் விடயங்களோடு கூடியதாம். ஆகத் தத்துவங்களிருபத்துநான்குமாம் இந்த ஸ்தூலசரீரம்.

இதுதான் சராசர ஜீவர்களுக்கும் சம்சாரமென்றறிக. இதுவே அவித்தியாப் பிரதிரூபமான சரீரம். இதிலிந்த இருபத்துநான்கு பிரகிருதிகளுக்கும் புருஷன் யாரென்றால் சராசரத்திற்கும், அந்தரியாமியாயும் ஏகமாயுள்ள ஜீவனென்றுதான். 'இந்தத்தத்துவங்களை' யடக்குமுபாயமெப்படி யெனில், இந்த இருபத்துநான்கு பிரகிருதிகளையும் தங்கள் தன் புருடரான ஜீவனிலடக்குமானாலடங்கும். அப்படியே இருபத்துநான்குத் தத்துவங்களுமடங்கிவிட்டால் ஜீவனுடைய சம்சாரசம்மந்த மடியோடே நாசமாகுமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம்.

மனம் ஓ சுவாமி! தாங்களருளிச்செய்தது சரி. ஆனாலும், இந்தச் ஜீவன் வந்தவிடமெது? இதுபோயடங்குமிடமெங்கே என்றுகேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! பிரகிருதி நாசத்தின்கண் புருஷனென்கிற நாமமணு மாத்திரமானாலுங் கிடையாயென்பது சத்தியம். ஆனாலும், சம்சார உற்பத்தி நாசங்களுக்கும், பெந்தத்திற்கும், மோக்ஷத்திற்கும் காரணம் மனமொன்றேயாமென்றும் இப்படிக்கொத்த மனதை யறியும்பொருட்டு விசாரித்துப்பார்த்தால், பிர்மாதி தேவர்களானாலும் அசாத்தியமாமென்று மறிக.

ஓ மனமே கேள்! இந்த உலகத்தின்கண் யாவனொருவன் தன் மனோரூபத்தை யுள்ளபடி உண்மையாகக் கண்டவர்கள் யாரோ அவர்களே இந்த உலகதத்துவத்தையும் தன்னுடைய தத்துவத்தையும், மனோரூபத்தையும், ஆத்மதத்துவத்தையுமுண்மையாகக் கண்டவர்கள். இதற்கு ஸ்ரீசற்குருவின் திருவருள் பெறவேண்டும்.

ஓ மனமே கேள்! இந்தப்படி தன்னுடைய மனதைத் தான்பார்த்தறியும்போது தன்னைத்தவிர யணுவளவும் வேறேயில்லை என்பது நிச்சயமாகும். இதைத்தவிர இரண்டாகத் தோற்றுவதற்குக் காரணம் அசுத்த வாசனையோடுகூடிய மனமொன்றுதான். சந்தேகமில்லை.

மனம் ஓ சுவாமி! இந்தப்படி மாயாபியாயிருந்த மனதைச் செயிப்பது யாராலும் அசாத்தியமாமென்று தோன்றுகிறது. ஆனாலும், நின் திருவடி யடியனிற் கிருபைசெய்து என்மனோரூபத்தையு முள்ளபடி உண்மையாகப் பார்க்கும்பொருட்டு திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மனதை மனதிற்கு மனமென்கிற பாவனை மாத்திரமல்லாமல் யெதார்த்தமாய்ப் பார்க்கும்போது அதற்கு ரூபம் அணுவளவுங் கிடையாதென்பது நிச்சயம். இது பரமரகசியமாமென்றும் யிதை பிர்மாதி தேவர்களாலுங் காணக்கூடாததாம். மனமென்றும் முன்கூறிய தாற்பரியம் என்னவெனில் ரூபமில்லாத வஸ்துவை யாரானாலும் பார்க்கக் கூடுமோ? கூடாதென்பது நிச்சயம். ஆதலால் மனமானதின் ரூபம் பாவனைமாத்திரமல்லாமல் வேறில்லை. மனதிற்குச் சொரூபம் அணுவளவுமில்லையென்பது சத்தியம். மனதின் நினைவானது அணுமாத்திரம். அதன் பாவனையானது இந்த உலகத்திற்கு மேலுங்கீழும் பூரணவிலாசமாயிருக்கும். ஆதலாலிந்த சராசரப் பிரபஞ்ச வஸ்துக்களெல்லாம் மனோ பாவனையல்லாமல் அணுவளவுங்கிடையாதென்பது நிஜம்.

ஓ மனமே இன்னுங்கேள்! மனோபாவனையாவதெது வென்றால் இந்த உலகத்திற்குக் காரணம் மாயை. மாயையில் தோற்றியதாம் ஜீவர்கள். அந்த மாயைக்கி ஜீவர்களில் புத்திர வாஞ்ஜையுண்டாயிற்று. அந்த ஜீவர்களெல்லாம் அந்த மாயயைப்பார்த்து மகாமோகமடைந்தன அந்த மகாமோக நிமித்தம் சங்கமுண்டாயிற்று. அந்தச் சங்கத்தினாலிந்த ஜீவர்களெல்லாம் அந்த மாயையோடேக்கூடிச்சேர்ந்து சிருஷ்டி செய்யும்பொருட்டு இச்சையடைந்தது. அந்த இச்சையின் நிமித்தம் சங்கற்பமடைந்தது. அந்தச் சங்கற்ப விகற்ப நிமித்தம் பாவனையென்றுமொரு சத்தி பிறந்தது.

ஓ சுவாமி! மனோபாவனையாவதெது வென்று கேட்க, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மனோபாவனையாவதெதுவென்றால் அது பரமாத்மாவுக்குள்ளிருந்தும் மாயையால் தோற்றமுமொடுக்கமுமாம் இந்த வுலகம். அதாவது, சாக்ரமும் சுழுப்தியும்போலவும் இரவும் பகலும்போலவும். மனச்சங்கற்பமானது கண்ணாற்கண்டதுங் காதினாற்கேட்டதும் மனதினால் நினைத்ததும் நாமரூபாதி சமஸ்தமும் மனசங்கற்பமாம். இந்த மன சங்கற்பமானது சாக்ர சொர்ப்பன சுழுப்தியென்கிற மூன்றவஸ்தையோடு

கூடி முக்குணசகிதமா யிருந்தமட்டுமிருக்கும். மூன்றவஸ்தையும் முக்குணங்களும் விட்டால் மனசங்கற்பமறும். மனசங்கற்பமற்றால் மாயையுங் கிடையாது. மாயை இல்லாவிட்டாலது நிற்குணமாம். ஆதலால், மனதைப் பரிசுத்தமாக்கி யேகாந்தஸ்தானமடைவதாம் மெய்யறிவிளக்கமென்றும், உண்மை நிலையென்றும் பிர்ம்மானந்த விளக்கமென்றும்பெரியவாள் சம்மதம். ஆனாலும், மனமிருந்தமட்டும் நானென்றும் நீயென்று மனேக பேதமாய்த்தோற்றும். மனமடங்கிவிட்டால் நானென்றும் நீயென்றும் உலகத்திலிரண்டல்ல. நான், நீ என்பதிரண்டுமில்லாவிட்டால் மனமேது, மனமில்லாவிட்டால் ஜடமேது, ஜகத்தேது, பெந்தமோக்ஷமேது எல்லாங்கனவு கண்டுணர்ந்ததைப் போலொன்றுந் தோற்றாது. தோற்றமு மொடுக்கமும்மனச்சங்கற்பமான கங்குல்பகலாம்.அதுமாயையென்றுமறிக. மனச்சங்கற்பமற்றால் கங்குல்பகலறும். கங்குல்பகலற்றால் சுயம் பிரகாசமாய்ப் பரிபூரணானந்தமாய் விளங்குமென்றறிக. மனம் ஆனாலும், முன் கூறிய நான், நீ என்கிற இருபாவனையும் விட்டுவிடு முபாயமெப்படியென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! உடல்பொருளாவி மூன்றுமொரு குருவினிடத்தில் தத்தம்செய்தால் நானேது எல்லாம் நீயாம். எல்லாம் நீயானால் நானேது? முக்காலத்திலுங் கண்டதெல்லாங் கனவாமென்றால் நானும் நீயுமில்லை. நானென்பதும் நீயென்பது மில்லாவிட்டாலுலகமேது? எல்லாம் பிர்ம்மமயமாமென்றறிக. அதாவது மண்ணான குடமுடைத்துத் தூளாக்கிவிட்டாலது மண்ணுமென்பதுபோல, மனம் பரிசுத்தமாய் அகங்காரத்தையுடைத்துத் தூளாக்கிவிட்டால் அது பரமாத்மாவாம். ஆகாயத்திற்குள்ளே வாய்வாதி நாலுபூதங்களுங் கலந்திருந்தாலும் அதுகளாலாகாயத்திற்குப் பெந்தமில்லாததுபோல் ஆத்மாவிலிருந்துத் தோற்றப்பட்ட சமஸ்தப் பிரபஞ்சமும் ஆத்மாவினிடத்தில் யாதொரு பற்றுதலுங் கிடையாது. ஆனாலும் தீயும் புகையும்போல ஆத்மாவினுடைய அம்ஸமாம் சமஸ்தப் பிரபஞ்சமும். தீயில்லாவிட்டாற் புகையேது, புகையிருந்தால் தீயிருக்குமென்கிற நிச்சயந்தான். அதுபோலுலகத்தைப் பார்த்தால் ஆத்மாவை யறியலாம். ஆத்மா யில்லாவிட்டால் பிரபஞ்சமேது? பிரபஞ்சத்தைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தாலதற்குக் காரணம் ஆத்மாவாமென்றுமறியலாம். காரணமில்லாமற்போனாலொருகாரியமுங் கிடையாது. காரணமான நெருப்பில்லாவிட்டாற் காரியமான புகையில்லை. காரணமான மண்ணில்லாவிட்டாற் காரியமானகுடமேது? அதுபோற் காரணமான பரமாத்மாவுங் காரியமான பிரபஞ்சமும் வேறல்ல. ஏகமென்றறிந்தால் ஆத்மாவைத்

தவிர அணுவளவும் வேறேயில்லையென்பது நிச்சயமாம். ஆதலால் மாயையானதும்பரமாத்மா, மனமானதும்பரமாத்மா, ஜெகத்தானதும்பரமாத்மா, ஜடமானதும் பரமாத்மா. எள்ளுக்குளெண்ணெயைப்போலெங்கும் பிரகாசமாய்ப் பரிபூரணமாம். பரமாத்மாவானது வெண்ணெயும் நெய்யும்போலே ஆத்மாவும் பிரபஞ்சமும் ஏகமென்றறிக. அதாவது அஞ்ஞானமென்கிற இருளை பிரக்ஞானங்கொண்டு நீக்கி விக்ஞானமென்கிற தீபத்தினல் பார்த்தால் எல்லாம் பிர்ம்மமயமாய் விளங்குமென்பதற்குச் சந்தேகம்வேண்டாம். அகங்காரக் கருவிகளற்று பரிபூரணனந்தத் தெளிவடைந்தால் சகல சந்தேகங்களும் நசிக்கும். எல்லாம் தானய்த் தனக்கன்னியமில்லாமல் பரிபூரணமாய் பரமாத்ம தத்துவார்த்த சமானமாயும் சர்வதத்துவங்களுக்கும் அந்தரியாமியாயும், அபரிச்சேத்தினயும் ஆகாயம்போல் பரிபூரணமாயும், சுயம்பிரகாசமாயும் விளங்குவதாம் பரமானந்தவஸ்து.

மனம் ஓ சுவாமி! இப்படிக்கொத்த பரமானந்தபரிபூரண பரமாத்ம சொரூபானந்த நிஷ்டையடையும்பொருட்டு, சுலபமான மார்க்கமெது வென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அகங்காரமென்கிற கட்டையை அரிஹராவென்னும் ஈஸ்வரார்ப்பணமாக்கிக் குருவின் திருவடியான பரமானந்த பதம் பிடித்து அறிவான பூமலர்க்கொண்டு பூசைசெய்து அவ்வியக்தமான பரப்பிர்ம்மத்திலற்பணமாக்கி நிராசையான நிர்மல பாததீர்த்தம் சிரசால் வணங்கிச் சாந்தமான பல மதுர பதார்த்தங்களான உபசாரங்களைக்கொண்டு சிரத்தா பக்திவிஸ்வாசமாய் அன்புடன் பூஜைசெய்து உடல்பொருளாவி மூன்றும் தூபதீபங்காட்டிப் பேரின்பத்துடன் திருவடிக்குத் தீர்க்கத்தெண்டமிட்டு ஆண்டவனடிமையென்றும் ஐயனைவணங்கி நின்று அன்புடனருட்பிரசாதமிருகையால் வாங்கி அமிர்தமாயனுபவித்து ஆனந்தப் பாஷ்பம்பொழியத் துதிசெய்து தீர்க்கதெண்டனிட்டு திருவடிகள் சிரசால் வணங்கிச் சிந்தையெல்லாம்விட்டு ஆத்மயோகமென்றும் நிர்விகர்ப்பசமாதியாய் ஞானனந்த முடிவிலே பிர்ம்மானந்தமாய் மௌனசமாதியிலிருப்பதாம் எதார்த்தக்ஞானம். இது நூதனவிவேகிகளுக்குள்ளே நுழையா. ஏனென்றல் அகங்காரமடியோடு நாசமடையுமார்க்கம் பாராமலும், தீவிரவைராக்கியம் குருபக்தி விவேகமிதுகளில்லாமலும் அகங்கார அபிமானியாய்த் தன்னறிவு முன்னிட்டுக் குருவைப்பின்னிட்டுக் குதற்கியாய் அநேகமான ஞானநூல்களைப் பார்த்தும் சம்சாரக்கடலின் நடுவிலே கிடந்திருகரையுங் காணமலலைந்து கோடி பிர்ம்மகற்பமானலும் கரைகாணன்.

மனம் ஓ சுவாமி! அறிவானது எதனுடையப் பிரகாசமென்று கேழ்க்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அது சிற்சத்தியின் பிரகாசமாம், சிற்சத்தியானது பரமாத்மாவின் பிரகாசமாம் அதாவது ஞானசிற்சத்தியாம், ஞானசிற்சத்தியாலுணர்வதாம் எதார்த்த க்ஞானம்.

மனம் ஓ சுவாமி! அந்த ஞான சிற்சத்தியின் சொரூபமாவது யாதென்று கேழ்க்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஞானசிற்சத்தியின் சொரூபமெதுவென்றால் அது பரமானந்தசொரூபமாம், அந்தப்பரமானந்த சத்திக்குப்பதியானதும் பரமாத்மா; குருவானதும் பரமாத்மா இதைத்தவிர சராசர ஜீவர்களுக்கும் குருவானதும், பதியானதும் அந்த ஞானசிற்சத்தியாம். ஆகாயம்போலெங்கும் பரிபூரணமான ஞானசிற்சத்திக்குள்ளே பஞ்சபூதங்களும், அநேக கோடி பிரமாண்டங்களும், அனேகவிதமான ஜீவர்களும், தேவாதிதேவர்களும், மகத்துக்களும் வித்துக்குள்ளே மரம்போலவும், மரத்துக்குள்வித்துபோலவும் ஸ்தூலமாயும், சூக்ஷமமாயும், காரணமாயுமடங்கியிருக்கிறது. இதுகளில் மகத்துக்களானது அந்த ஞானசிற்சத்தியின் அம்சமான திருவவதாரமாம். ஆதலால் சுகஜீவியாயிருக்கும்பொருட்டு அறிவானதொரு குருவின் திருவடிக்குப்பின்னிட்டு நடப்பதினால் அறிவு விளங்கி பிர்ம்மானந்த சக்தியிலடங்கியிருக்கும். அறிவானது ஞானசிற்சத்தியிலடங்கிவிட்டால் அகங்காராதி தத்துவங்களெல்லாமடியோடே நசிக்கும். அகங்காராதி தத்துவங்கள் நாசமடைந்தால் அறிவு விளங்கிப் பரிபூரணமாய் நிர்மலமாயிருப்பதை பிர்ம்மானந்தவிளக்கமென்றறிக. ஆதலால் அறிவை மறந்தமறப்பேமனமாமென்றும், அந்தமனமே திருடனென்றும், குருடனென்றும், கோரமூடமாமென்றும், கொடும்பாவியாமென்றும், தானே தனக்குச் சத்துருவாமென்றும், எமனென்றும், குருத்துரோகியாமென்றும், அதனால் நரகமாம்பலனென்றுமறிக. அறிவையறிந்த அறிவே குருவாயும், பரமாத்மாவாயும், பெந்துமாயுமிருக்கும். அதாவது வேதாந்த சித்தாந்த சமரச சச்சிதானந்த ஸ்வயஞ்ஜோதியாய்ப் பரிபூரணானந்தமாய் விளங்குவதாம் மெய்யறி விளக்கமென்றும் பெரியவாள் சம்மதம்.

மனம் ஓ சுவாமி! இப்படிக்கொற்ற ஞானிகளின் இலக்ஷணமென்னவென்று கேழ்க்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! உலகத்தின்கண் ஞானிகளனேகவிதமிருந்தாலும் அவர்களிரண்டுவிதமாம். அதாவது அகக்ஞானிகளென்றும், புறக்ஞானிகளென்றுமறிக இதுகளிற் புறக்ஞானமாவது அநேக ஞானநூல்களைக் கற்றுணர்ந்தும் எல்லாம்விட்டுத் தீவிரவைராக்கியத்துடன் சந்நியாசியாய் ஞானவீட்டையடைந்தாலும் ஞானவீட்டிற்குள்ளே நுழையாமற்றடுக்கும் பொருட்டு மூன்றுவிடமுட்டாள் காவலிருக்கிறார்கள் இவர்கள். மகாபலமுடையவர்களும் அறிவுகெட்ட மூடர்களுமாதலாலிவர்கள் ஞானவாசலைத் தடுக்கும் முழுமூடர்களாமென்றறிக. இவர்களுடைய யிணக்கமும் நல்லதல்ல. பிணக்கமும் நல்லதல்ல. அப்படிப் பிணங்கினாலும், இணங்கினாலுமிவர்கள் பேரின்பமான ஞானவீட்டிற்குள்ளே விடமாட்டார்களென்பது நிச்சயம்.

மனம் ஓ சுவாமி! இப்படிப் பேரின்பமான ஞானவீட்டின் வாசலைத் தடுக்கும் மகாபலமுடைய துஷ்டமுட்டாள் மூவரும் யாரென்று கேட்க அறிவு கூறியது,

ஓ மனமே கேள்! மனமானதையொருமைப்படுத்தி ஏகாந்தசித்தமாக்கிச் சதானந்த சகசநிஷ்டையையடைந்து ஸ்வரூபசாக்ஷாத்காரமாகும் பொருட்டு உள்முகமாய் விளங்காமல் அதற்கு விரோதமாய் ஞானவீட்டின் வாசலைத்தடுக்கும் முன்கூறிய விடமூடர்கள் மூவரும் யாரென்றால் அதம் பாவனை, சமுசய பாவனை, விபரீத பாவனை அதாவது அக்ஞானம், விபரீதம், சந்தேகம் என்றிவர்கள் மூவர்களுமாம். இதுகளிற் சந்தேகமென்பது நானென்றும், குருவென்றும், பரமாத்மாவென்றும் உலகமென்றுமிதுகள் நான்கும் ஏகமென்றறியாமல் நான் வேறே, குருவேறே, பரமாத்மா வேறே, உலகம்வேறே, என்றெண்ணி நானாவிதமாய் மனக்கவலையடைந்து அநேகவித சந்தேகத்திற்கிடமாய்க் குரு சுருதி யுக்தி யனுபவமில்லாமற் கெட்டலைந்தும் ஆசாரியர் வாக்கியப்பிரமாணங்களெல்லாம் மெய்யா பொய்யா? பூரணர்ஞானம் குருவிற்கிருக்குமா? குருவும்நம்மைப்போலொரு மனுஷியந்தானே! எல்லாவற்றிலும் சிறந்தது கடவுள் இத்தப்படியெல்லாம் நினைப்பது சந்தேகம் இரண்டாவது விபரீதமாவது மோக்ஷம் பொய்யாமென்றும் போகம் மெய்யாமென்றும் மந்தபுத்திகளாய் மோக்ஷம்மெய்யானாலும் ஒருஜன்மத்திலடையத்தகுந்ததல்லவென்றும் அநேகஜன்மம் வேண்டியிருக்குமென்றும் ஆதலாலிந்த ஜன்மததில் மோக்ஷங்கிடையாதென்றும் தேகமே நித்தியம், போகமே சத்தியமென்றெண்ணுவதாம். மூன்றாவது அஞ்ஞானம் அங்ஙனம் அஞ்ஞானமாவது நான் அநேகஞான

நூல்களைப் பார்த்திருக்கிறேன். எனக்கு அதனுடைய தாற்பரியம் நன்றாய்த்தெரியும். ஆனாலும் நான் சம்சாரி, இதுகளென்னுடைய சம்சாரமிதுகளுக்கெல்லாங் கர்த்தா நான்தான். நான்மரணமடைந்தாலிவர்களுக்கு யாருந்துணையில்லை. ஆதலால் வீண்காலம்போக்காமல் மரணகாலம்வரையில் நல்ல போகங்களைப் புசித்தானந்தமாயிருக்கவேண்டும். செத்துப்போனபின் சுகதுக்கமேது, அதெல்லாஞ் சுத்தப்பொய். இந்தப்படியெல்லாம் நினைந்தாத்மாவை மறந்ததே அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம், அஞ்ஞானம் இந்தப்படி இம்மூன்று முழுமூடர்களுங்கூடி மனக்கவலை யடைந்ததாதலால் ஞானக்கினி இல்லாமற்கெட்டு ஏகாந்தஸ்தானமான நிஜஸ்வரூப சாக்ஷாத்காரமடைவதற்கு மார்க்கமில்லை. இதுவே புறக்ஞானலெக்ஷணமென்றறிக. இன்னும் அகக்ஞானிகள் யாரென்றால் நீறுபூத்த நெருப்பைப் போலிருக்கும். அதாவது திரிகுணமயமான உலகவிபூதிக்குள் சூக்ஷமாய் மறைந்திருந்து ஆத்மாவைப்பார்க்கும்பொருட்டுந்த திரிகுணமயமான உலகவிபூதியை யூதிப்பார்த்தால் ஆத்மாவான நெருப்பு சுயம்பிரகாசமாய் விளங்கும். ஆதலால் திரிகுணமயமான அகங்காரத்தையடக்கி நானும் நீயுமெட்டுத்திசை பதினாலுலகமுமதற்குள் சராசர ஜீவர்களும் மற்றும் மேலான தேவாதி தேவர்களுங் குருதெய்வம், பரமாத்மா யிதுகளேகமாமென்றும், இது நாமல்ல கடவுளின் திரிகுணமயமான விபூதிசொரூபமாமென்றும், அதுவே நாமாகுமென்றும் அந்த நான் என்கிற அகங்காரவிபூதியை யூதிப்பார்த்தால் அந்தகங்காரமும் நாமல்ல அது மாயை, நாம்பரமாத்மாவாமென்று மறிவதுதான் அகக்ஞானியென்றும், பரோக்ஷக்ஞானமென்றறிக. அந்தப் பரோக்ஷக்ஞானமாவது உண்மைநிலையைக் கண்டதாமென்றுமிந்தப்படி அகங்காரத்தைவிட்டு நிஜஸ்வரூபமான பரோக்ஷமடைந்தாலதுவே அகக்ஞானமாமென்றுமதனால் அபரோக்ஷக்ஞானானுபவமாமென்றுமறிக. இன்னும் முன்கூறிய பரோக்ஷமாவது குருமுகமாயறிவதுதான். அதாவது சராசரத்திற்கும் அந்தரியாமியாயுஞ் சர்வபரிபூரணமாயும், ஏகமாயுங் குருவாயுமுள்ள ஆத்மாவைக்கண்டு உபாசிப்பதுதான் பரோக்ஷமென்றும், அபரோக்ஷமாவது சாக்கிரசொர்ப்பன சுழுப்திஇம்மூன்றவஸ்தையோடுகூடிய சாத்வீக ராஜத தாமச மிம்மூன்று குணத்திற்கதீதமாயும்அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாயும் விளங்குவதாம் பரோக்ஷம். இந்தப்படி பரோக்ஷ அபரோக்ஷ மிரண்டையுமறிந்த நீ யாரென்று உனக்குள் அன்புற்றுப்பார்த்தாலுன்னுடைய சந்தேகமெல்லாம் நசிக்கும். அஞ்ஞான விபரீதங்களுந் தீரும். இதற்குச் சந்தேகம்வேண்டாம். இன்னுங்கேள் மனமே! சந்தேக நிவர்த்தியாவது உலகமெல்லாம் பொருளாயிருந்தாலும் பிதா சம்பாதித்தப் பொருளுக்குப் புத்திரனவகாசியாமென்

பதுபோலிவ்வுலகத்தில் சாஸ்திரங்கள் அளவிறந்தகோடியிருந்தாலுந் தன் குருவுபதேசமான மகாவாக்கியப் பிரமாணங்களை நம்பி பூரண விஸ்வாசமுஞ் சிரத்தையும் பக்தியுமுடைய சிஷ்யர்களுக்குச் சகல சந்தேகங்களுந் தீர்ந்து பூரணஞானத்திற் கவகாசியாமென்றறிக. ஆதலாலறிவுக்கு மறிவான வறிவைவணங்கும் மனமே மனம். மனதையடக்குமறிவே பரோக்ஷ அபரோக்ஷ அத்துவிதமென்றறிக. மனமானது மாயை. அதான தணுவுக்கணுவாயுமிருந்து அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமான பரமாத்மாவை மறைக்கப்பட்டதென்றிக. மனமடங்கிவிட்டால் மாயை கிடையாது. மனமானது சர்வப்பிராணிகளுக்கு மொன்றுதான். அறிவான ஆத்மாவுமொன்றுதான். ஆனாலும், வெகுவிதபேதமாய்த் தோன்றுவதெதுவென்றால் அநாதியான வாசனையோடுகூடிய குணபேதமாமென்றறிக. வாசனையுங் குணமூன்றுமடங்கிவிட்டால் மனம் பரிசுத்தமாய் அபேதமாய் விளங்குமென்பதற்குச் சந்தேகம்வேண்டாம். மனம் சரீரகங்காரத்தோடு கூடியிருந்தமட்டு மணுமாத்திரமாயும் அஞ்ஞானத்தால் அநேக பேதமாயுந்தோற்றுவது சுபாவீகம். ஆதலால் அகங்காரத்தை அறிவு கொண்டடக்கி அறிவையாத்மாவென்றறிந்தால் அறிவுவிளங்கிச் சந்தேகமெல்லாந்தீரும். சந்தேகநிவர்த்திக்குக்காரணம் முன்கூறிய ஏகாந்த குருபக்தி யொன்றுதான். வேறில்லை. அதாவது குருபக்திகொண்டு சித்தம் பரிசுத்தமாம். சித்தம் பரிசுத்தமானு லுத்தம குருபக்தியடையலாம்.

மனம் ஓ சுவாமி! உத்தமகுருபக்தனுக்குக் குருவுபதேசமாவதென்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! உத்தம குருபக்தனுக் குபதேசமாவது, அநாதமாயும், அநாமயமாயும், அநாதாரமாயும், நிராதாரமாயும், நிராகாரமாயும், நிரூபமாயும், நிறஞ்சனமாயும். நிஷ்கள களேபரமாயுமுள்ள பிரணவாக்ஷரமாம். அந்தப் பிரணவாக்ஷரத்திலிருந்தும் கடலொலிபோலும், அங்காரமான வண்டின் தொனிபோலும், மணிநாதம்போலும், ரீங்காரமென்கிற ஒரு நாதந்தோன்றும். அந்த நாதமானது ஞானசிற்சத்தியாம். அந்த ஞானசிற்சத்தியின் பூரணப்பிரகாசமானது ஸ்ரீங்காரமென்கிற மகதத்துவமாம். அந்த மகதத்துவத்திலிருந்தும் அகங்காரமான யகரமென்கிற சப்ததன்மாத்திரையும், அந்த சப்ததன்மாத்திரையிலிருந்தும் வகரமென்கிற ஸ்பரிசதன்மாத்திரையும், அந்த ஸ்பரிசதன்மாத்திரையிலிருந்தும் சிகரமென்கிற ரூபதன்மாத்திரையும், அந்த ரூபதன்மாத்திரையிலிருந்தும் மகரமென்கிற ரசதன்மாத்திரையும், அந்த ரசதன்மாத்திரையிலிருந்தும் நகரமென்கிற கெந்ததன்மாத்திரையும் ஆகப் பஞ்சதன்மாத்திரையான ஐந்து சத்திகள் பிறந்தது.

இந்தப்படி சப்தஸ்பரிசரூப ரஜகெந்தங்களாம் தன்மாத்திரைகளான பஞ்ச வித பஞ்சாக்ஷரமும் முன்கூறின பிரணவமுதல் மூன்றக்ஷரமும் ஆக எட்டக்ஷரமும் அஷ்டாக்ஷரமாம், அஷ்டசத்தியாம் இந்த அஷ்டசத்தியும் அகங்காரமான ஸ்தூலப்பிரபஞ்சத்திற்குக் காரணம். இதுகளில் நகரமுதல் ஏழு அக்ஷரமும் பிரணவத்திலடக்குவதாம் அகங்காரத்தினடக்கமென்றும், யோகமுடிவென்றும், நாதமுடிவென்றும், வேதாந்தமென்றும், வேதாந்திகளான பெரியோர்களுடைய அபிப்பிராயம். ஆனாலும் சொரூபசாக்ஷாத்காரமடையும்பொருட்டு சகல அவயவங்களோடுக்கூடிய கடவுளின் சொரூபமாம். இந்தஸ்தூலப் பிரபஞ்சத்தை கடவுளின்சொரூபமாயும் அஷ்டாக்ஷரமாயும், ஏகமாயுங்கண்டு உபாசித்துவணங்குபவர்களுக்கு வேறொருதெய்வமுங்கிடையாதென்பது நிச்சயம். ஆனாலுமிதுகளில் முக்கியமாயும் திரிகாலத்திலும் நாசமில்லாததாயுமுள்ளது பிரணவசொரூபமொன்றுதான். பிரணவ சொரூபமடைந்தவானுக்கு வேறொருதெய்வமும் பேச்சிங்கிடையாது. இந்தப்படி யெதார்த்தக்ஞான மடையும் பொருட்டு பரமாசாரியருடைய உபதேசமும் குருபக்தி விஸ்வாசமும் வைராக்கியமும் அப்பியாசமுமில்லாமற்போனால் எதார்த்தக்ஞானமான அனுபவம் கனவிலுங்கிடையாது. ஆதலால் ஞானத்திற்கதிகாரிகள் ஏகாந்தபக்தயோகிகளாம். குருபக்தியில்லாமல் சித்தம் பரிசுத்தமடையாது சித்தம் பரிசுத்தமடையாமல்போனால் யோகாப்பியாசம் செய்யமுடியாது. யோகாப்பியாசமில்லாவிட்டால் ஞானமடையாது யோகத்தின்முடிவாம் ஞானமென்பதற்குச் சந்தேகம்வேண்டாம்.

மனம் ஓ சுவாமி! அப்பியாச யோகமாவதெதுவென்று கேழ்க்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அப்பியாசயோகமாவதற்கு முதலாவது இந்திரியங்களெல்லாமடக்கிச் சித்தம் பரிசுத்தமாக்கிக்கொண்டு அப்பியாசஞ் செய்யவேண்டும். அதாவது சமமாயோராசனத்தில்சமகாயனாயிருந்து அமல யிருதயனாய்ச் சுகமாகும்வண்ணம் இரண்டு கைகளும் தொடைமேல்வைத்து ஸ்ரீ சற்குருவின் திருவடியிரண்டும் சித்தத்தில் ஸ்திரமாய் நிறுத்தி நாசிகா முனையில் ஈக்ஷணனாய் திருஷ்டியை நிறுத்தி பிராணனுடைய சஞ்சார மார்க்கத்தைப்பார்த்து அந்தப் பிராணபான வாய்வுக்களை ரேசக, பூரக, கும்பக மிதுகளைச்சமானமாக்கிச் சுழிமுனையில் மெள்ளமெள்ளகண்டுஅப்பியாசஞ்செய்து பழகிவருவதானால் குருதெரிசனமாகும். குருவானது பிரணவசொரூபமாம் அதாவது சாந்தமாயும், சமானமாயும், சாமளமாயும் கோமளமாயுங், குணாதீதமாயும், நிஷ்களமாயும், கோடிசூரியப்பிரகாசமாயும்

அகண்டபரிபூரண நித்திய நிர்மல நிர்ச்சலமாயும், சச்சிதானந்தசொரூபமாயும் விளங்குவதாம். பிரணவசொரூபமென்றுமறிக. இதை ஸ்ரீ சற்குருவின் சன்னிதானத்தின்கண் அப்பியாசிக்கவேண்டுவதாதலால் சங்கிரகமாகச் சொன்னோம்.

ஓ மனமே கேள்! இத்தக்கலியுகத்தின்கண் தாமசகுணமதிகமாகையால் சர்வவர்ணாசிரம குலாசார தர்மங்களும் விபரீதமாயிருக்கிறது. வர்ணாசிரம குலாசாரதர்மமாவது சதுர்வர்ணத்திற்கும் விதித்த விதிப்படி செய்யவேண்டியதவசியம். வர்ணாசிரமங்களில் சூத்திரர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் மந்தர தந்திர கர்மங்களும் வேதசாஸ்திர புராணயிதிகாசங்களுக்கும் ஒரு யுகத்திலும் அதிகாரமில்லை. அதைத்தவிர இரண்டாவது வைசியர்களுக்குக் கிருஷிவாணிபம் பசுரக்ஷை முதலான கர்மங்களை வஞ்சகமில்லாமற்செய்யவும். மூன்றாவது--க்ஷத்திரியதர்மம். ஜீவகாருண்யமுடைய பிதாவுக்குண்டான புத்திரவாச்சல்யம் போலே பிரசை பரிபாலனஞ்செய்யவும். நான்காவது--பிராம்மணஜாதிகளுக்குச் சர்வதர்ம கர்ம மந்தரதந்திராதிகளுக்கும் சரியை கிரியை யோகம் ஞானமிதுகளெல்லாவற்றிற்கும் அதிகாரமுண்டு. ஆதலால், கிரேதாயுகம் பிராம்மணனென்றும், திரேதாயுகம் க்ஷத்திரியனென்றும், துவாபரயுகம் வைசியனென்றும், கலி சூத்திரனென்றும் ஆகமாதி புராணேதிகாசங்களிலும் மகாத்துமாக்களும் கூறியிருக்கிறது. அங்ஙனம் கலி வந்தவார் காலபேதத்தினாலும் சர்க்கர்மலோபத்தினாலுமென்பது கருத்து. ஆதலால் கலிகாலத்தில் சர்க்கர்மங்களும் சாதுக்களில் பக்தி விஸ்வாசமும் ஞானவிக்ஞான வைராக்யாதிகளும் ஸாத்வீக விருத்தியும் நாஸ்தியாய்ப்போய்விட்டது. தர்மமெல்லாம் காட்டுக்குப்போய்விட்டது. சர்க்கர்மங்களெல்லாம் சண்டாளனிடம் போய்ச்சேர்ந்தது. அதனால் தாமசகுணமதிகமாமென்றும் அத்தத்தாமசகுணமே கலியென்றும் அத்தக்கலி தர்மமே சூத்திர சமாசாரமென்றும் சுருதி ஸ்மிருதி வேத சாஸ்திர புராணேதிகாசங்களும் மகாத்துமாக்களும் கூறப்பட்டது சத்தியம். ஆதலால், இத்தக்கலி சர்வபரிபூரணமாயும் மகாபலமுடையதாயும் சர்வாதிகாரியாயும் சர்வத்திற்கும் கர்த்தாவாயுமிருக்கிறது. இத்தப்படியுலகமெல்லாந் தாமசகுணமதிகமாய்க் கலிரூபமாய் எல்லாம் சூத்திரவர்ணமாயும் வர்ணசங்கிரஹா மென்பதற்கு என்ன சந்தேகம், அங்ஙனமெப்படியெனில் சர்வாதிகாரமும் கலிதர்மத்தோடு கூடிய சூத்திரனுக்குளடங்கிருக்க முன்கூறிய பிராம்மணாதி மூன்றுவர்ணங்களும் அடிபட்டுக் கீழே விழுந்து எல்லாம் வர்ணசங்கிரமாய்க் கிடக்கிறது. ஆதலாலொருவருக்கும் ஒரு கர்மத்திற்கு மதிகாரமில்லை.

மனம் ஓ சுவாமி! தாமசகுணந் தனியாயிருக்குங் கலியுகத்தில் கலி சபையைத் தாண்டி நற்கதியடையும்பொருட்டு வல்லசன்மார்க்கமுண்டா வென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! கலிதர்மமெல்லாம் அதர்ம விதர்மங்களாயும், கலி கர்மமெல்லாம் அகர்மவிகர்மங்களாயும், சுகர்மங்களெல்லாம் நாஸ்தியாயும் வந்துவிட்டதால் இந்தக்கலியுகத்தின்கண் ஒரு கர்மத்தினாலுமொருவருக்கும் சற்கதிக்கு மார்க்கமில்லை. உலகத்தின்கண் சாதுக்களில்லாமற் போனால் இந்த வுலகமெல்லாங் கீழேவிழுந்துபோகுமென்பதற்குச் சந்தேகம்வேண்டாம். சாதுக்களினாலிந்த வுலகம் நிலைநிற்கிறதென்றும் கருத்து. சாதுக்கள் அதிதுர்லபம் கலிகாலத்தில் கலிகர்மத்தினாலும், கலி தர்மத்தினாலும், சற்கதிக்கு மார்க்கமில்லையென றும் முன்கூறிய தாற்பரியம். ஆனாலும் லோகரக்ஷகராகிய பகவன் நாமசங்கீர்த்தனங்களைக் கொண்டும் துர்ச்சங்கமெல்லாம் தூரவிலக்கி சற்சங்கப்பழக்கமுஞ்செய்து பழகிவருவதானால் சூரியபகவான் உதயகாலமடுத்தால்இருள்மெள்ளமெள்ள நீங்கி வெளிச்சமாவதுபோல் தாமசகுணமான கலிதிமிரம் நீங்கி சாத்வீகம் பிரகாசிக்கும். அங்ஙனம் சாத்வீகம் பிரகாசமானால் சர்வ கர்மமும்விட்டுச் சித்தம் பரிசுத்தமாய் நிராசையாய் வைராக்கியத்துடன் பரிசுத்தகுண விருத்தியோடுகூடி ஆத்மானுபவயுக்தனாயுள்ள ஒரு சற்குருவை யடுத்து அவர்கள் தன் பாதபூசை முதலான கைங்கிரியங்களைச் செய்துகொண்டு சந்தோஷமானபடி குருவருள் மகா வாக்கியத்தைக்கொண்டும் அனவரதமும் காத்துப் பன்னிரண்டு வருஷம் வைராக்கியத்துடன் அப்பியாசஞ்செய்து பழகி வருவதானால் சமாதிகூடும் சமாதி கூடுமானால் உலகத்தின்கண் சக்கரவர்த்திக்குங்குருவாய் சார்வ பவுமனாய் சர்வகாலமும் வாழலாம் சந்தேகம் வேண்டாம். இப்படிக்கொத்த மகத்துக்களுக்குப் பதினெட்டுச் சித்திகளும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கைவசமாயிருக்கும். ஆனாலுமிதுகளெல்லாம் நச்சுரமாமென்றும் சித்திகளினாலுள்ள சுகமெல்லாம் மனோசுகமாமென்றறிந்து சுவான வாந்தியைப்போல் தூரத்தள்ளிவிட்டு ஆத்மானுபவ சுகத்தைச் சதாகாலமும் பானஞ்செய்துக்கொண்டு பிரம்மானந்தமாயிருப்பார்கள். இதைத் தவிரயுள்ள யோகாப்பியாசத்தைக் கொண்டும் சித்துக்களைக்கொண்டும் நெடுநாள் சிரஞ்சீவியாயிருந்தாலும் மறுபிறப்புண்டு. அங்ஙனம் யாதெனில், ஆத்மயோகத்தைப்பார்க்கில் அதைத்தவிர ராஜயோக முதலான தெல்லாயோகமும் சுத்தப்பொய். அங்ஙனம் வந்தவார் யாதெனில், ஆத்மாவானதெங்கும் ஏகமாயும் பரிபூரணமாயும் என்றைக்குமுள்ளதாயும் சத்தியமாயுமுள்ளது. சரீராதி வஸ்துக்களெல்லாம் அவித்தியா நிர்மிதமாயும், அசத்தியமாயு மனித்தியமாயுமுள்ளதாமென்பதற்கு

ஒருவருக்கும் சந்தேகமில்லை. ஆதலால் முன்கூறிய யோக சித்திகளெல்லாம் பொய்யாமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம். உலகம் பொய்யாமென்கிற விஸ்வாசம் வந்தால் பூமிமுதல் நாதபடியுள்ள ஐஸ்வரியங்களும் யோக சாதனங்களும், யோக சித்திகளும்பொய். பிராணிகளின் சரீரத்தின் மூலாதாரமுதல் ஆருதாரமும் பொய். பிராணபானவாயுக்களும் பொய். ரேசகபூரச கும்பகமும் பொய். நாசி நாக்கிர சுழிமுனையும் பொய். அதைப் பார்த்துத் தியானஞ்செய்துக்கொண்டிருந்த மனதும் பொய். இப்படிக்கொத்த ராஜயோகத்தை உபதேசிக்கப்பட்ட குருவும் பொய். இதற்குச் சந்தேகம் வேண்டாம். ஆதலால் சற்குரு பக்தி விஸ்வாசங் கொண்டும் ஆத்மயோகமொன்றுதானெல்லா யோகத்திலும் சிறந்ததாயும், சத்தியமாயும், நித்தியமாயும், சுத்த கைவல்லிய பதத்தையும் அடையத் தருந்ததாயுமுள்ளது. ஆதலாலிந்த ஆத்மயோகத்தைச் செய்வது எல்லா வற்றிலுஞ் சிறந்தது. இதற்கு அதிகப்பிரயாசமில்லை எல்லோருக்கும் அதிகாரமுண்டு. இதைத்தவிர முன்கூறிய ராஜயோகமுதலான அப்பியாசயோகத்தைச் செய்வதற்கு அதிகாரிகள் கலியுகத்தின்கண் அதிக துர்லபம். ஆதலால் எல்லாவற்றிலும் சிறந்தது. ஆத்மாவினுல் அனுத்மாவினை மறந்து ஆத்மாவுங்கொண்டு பரமாத்மாவினையறிந்த யோகிகளும் ஆத்மாவிலன்புபக்தி விஸ்வாசமுடையவாளுக்கு அதோகதியடையாமல் எமதண்ட பாசமும் நரகமுந்தீர்ந்து மேன்மேலேறி அனேக ஜன்மமாளுலும் நித்தியானந்த கைவல்லிய பதமடையலாம் சந்தேகம் வேண்டாம். ஆதலால் இந்த ஆத்மயோகமே எல்லாவற்றிலுஞ் சிறந்தது. ஆத்மாவைத்தவிரயுள்ள தேகாதிப்பிரபஞ்ச வஸ்துக்களெல்லாம் மாயையின் சொரூபம், மாயாத்தோற்றமாவது விபரீதப்பிருந்தி, அதானது கானற்ஜலம், கயற்றில் பாம்பு, முயற்கொம்பு, மலடி மகன், முத்தச்சிப்பியில் வெள்ளி, இத்தியாதி நாமரூபங்களைப்பார்த்து உண்மையாகத் தோற்றுவதஞ்ஞானத்தோடு கூடிய மனப்பிருந்தியல்லாமல் வாஸ்தவமல்ல. ஆனுலும் முன்கூறிய ராஜயோகமெல்லாம் எல்லாயோகத்திலுஞ் சிறந்தது. அந்த ராஜயோக சித்தியினுல் அணிமாதி பதினெண் சித்திகளுமடையலாம். உலகத்திற்குப் பெரியவாளாயிருக்கலாம், பெரிய யோகிசுவாமியென்று கீர்த்திபெறலாம், மகா ராஜாக்களுக்கும் பொருளதிக முடையவாளுக்குங் குருவாயிருக்கலாம், பொருளதிகம் சம்பாதிக்கலாம் இகலோகத்தில் சுகமாயிருக்கலாம், இந்த லிங்க சரீரம்விட்டு பரலோகம் போகலாம், அனேக லோகங்களிற் சுகமாய்ச் சஞ்சரிக்கலாம், அங்கே சூக்ஷும சரீரம்விட்டு மறுபடியும் ஒரு நாள் பூமியில் கும்பி நரகத்தில் வீழும். அப்போதுண்டாகும் துக்கம் இப்போது சொன்னுல் ஒருவருக்குந் தெரியாது. ஆதலால் அனுத்ம வஸ்துக்களான தேகாதிப் பிரபஞ்ச வஸ்துக்களிலுள்ள ஆசையும்போக சித்திகளையுந் தூரத்

தள்ளிவிட்டு அஞ்ஞானத்திற்கேதுவான அகங்காரத்தை ஆத்மாவிலடக்கி ஆத்மாவினைப் பரமாத்மாவிலடக்கி ஐக்கியம் செய்வதே மோக்ஷம். இதைத் விர யுள்ளதெல்லாம் பந்தம் ஆதலால் ஆத்மயோக அப்பியாசம் மெத்தவும் நன்று. அதனாலொருகாலத்தும் அதோகதியில்லாமல் மேன்மேலேறி நித்தியானந்தமாயுள்ள கைவல்லிய பதமடையலாம். சந்தேகம் வேண்டாம். அதுமல்ல, இந்த ஆத்மயோக சித்தியைத்தவிற யுள்ள யோக சித்தியடைந்த வானுக்கு நான்தான் யோகீஸ்வரனென்றும்; நான் உலகத்திற்குப் பெரிய வானென்றும், அகந்தையும், அகமமதையும், மேற்கொண்டு எப்போது முள்ளதாயும் ஆனந்தமாயுமுள்ள ஆத்ம சுகத்தை மறந்துவிடும். அகந்தை கொண்டு ஆத்ம சுகத்தை மறந்தவானுக்கு மகா ராஜயோகியாயிருந்தாலும் அந்தச் சரீரம்விட்டு அடிக்கடியும் தலைகீழாய் வந்து கும்பி நரகத்தில் வீழும். கும்பி நரகமாவது மாதர்குட்சி. ஆதலால் அஞ்ஞானத்திற்கும். அகங் காரத்திற்கும், நரகத்திற்குமேதுவான அனாத்மயோகச்சித்தையும், காயசித்தி களையுந் தூரத்தள்ளிவிட்டு சற்குரு பக்தி விஸ்வாசத்துடன் ஆத்மயோகத்தி லிருந்தும் அப்பியாசஞ்செய்து பழகிவருவதானால் எதார்த்தஞானமானது உள்ளங்கை நெல்லிக்கனிபோற் கைவசமாகும். அங்ஙனம் யோகாப்பி யாசஞ் செய்யாமற்போனால் ஞானம் வராயென்றும், பல நூல்களிலுங் கூறியிருக்கிறது. சரிதான் சந்தேகம் வேண்டாம். ஆதலால் யெல்லா யோகத்திலுஞ் சிறந்தது. ஆத்மயோகமொன்றுதான் எல்லா சித்திகளிலுஞ் சிறந்தது ஆத்ம சித்தியொன்றுதான். இதுதான் முன்கூறியதிற்கெல் லாம் தாற்பரியம். இந்தப் பரமரகசியமே மகத்துக்களும், உபநிஷத்துக் களும் கூறியதின் முக்கிய தாற்பரியம். இதுவே மெய்யறிவிளக்கமென் றும், உண்மைநிலையென்றும், மகாத்துமாக்களுடைய சம்மதம். இதனால் எல்லா லோகத்தையுந் தாண்டி மூலமாயையைக்கடந்து பரமானந்த பத மடையலாம்.

ஓ மனமே கேள்! ஆத்ம சத்தியோகத்திலிருந்தும், சுரோத்திராதி ஞானேந்திரியமைந்தும், வாக்காதி கர்மேந்திரியமைந்தும், குணமூன்றும், அந்தக்கரணம் நான்கும் அடக்கி மனோலயமாவதே ஆத்மயோக லக்ஷ ணம். பேராசையானது பாபம், துக்கம், நிராசையானது பரமசுகம், பரம சுகமென்பது பிரம்மானந்தம். இந்த வுலகத்தின்கண் சேர்க்கவாசனை யோடு கூடியவாள் சந்நியாசியானாலும் அவாளைக் கலிமோசஞ்செய்யக் கூடும். இயற்கை வாசனையோடுகூடியவாள் சம்சாரியானாலும் அவா ளிடத்தில் கலிபயந்திருக்கும். எல்லாம் பகவத்சொரூபமாக நினைந்த யோகிகளிடத்தில் கலியணுவளவானாலுமிருக்குமா. ஆசையானது கலி, நிராசையானது பிரகாசம், பிரகாசமிருந்தயிடத்தில் யிருள் அணுவளவானா

னும் வந்தசையுமா சூரியபகவானிடத்தில் ஒரு சமயமானுலுமிருள், வந்தணுகுமா அதுபோல் சாந்தகுணமுடைய குரு சிஷ்யனிடத்திலும் எதார்த்த ஞானிகளிடத்திலும் கலி அணுவளவுமில்லை. ஆத்மாபரிபூரண மென்றறிந்த மகத்துக்களுக்குக் கலி யென்பது சுத்தப்பொய். நிவர்த்திக் கிச்சையுடையவாளிடத்தில் கலி வந்தடையும் பிரவிர்த்தி நிவர்ந்தியிரண்டும், சமமாய்க்கண்ட மகான்களிடத்தில் கலி சகாயமாயிருக்கும். சாக்ஷாத் பரமாத்மாவினை தன்னிருதயத்தில் வைத்துப் பாவித்து பூசித்துச் சேவிப்பவர்களுக்கு பகவான் பரிபூரணானந்தமாயிருக்கும் அந்த இடத்தில் காலமேது கலியேது, கர்மமேது, சுகமேது, துக்கமேது. நரகசுவர்க்கமேது, பந்த மோக்ஷமேது, எல்லாந் தானுயிருந்தால் தனக்கன்னியமானது அணுவளவு மில்லை என்பதே பெரியவாள் சம்மதம். கலி வந்தவார் திரிகுணபேதத்தினுலே அங்ஙனம் எப்படி யெனில், முக்குணத்தினுல் நான்குயுகம் இதுகளில் கிரேதாயுகமாவது சாத்வீகம் தனி. இரண்டாவது திரேதாயுகம் சாத்வீகமும் ராஜசமுங்கூடி இரண்டாகக் கலந்திருக்கும். மூன்ருவது துவாபரயுகம், அதானது ராஜச குணமும் தாமசகுணமுங்கூடி இரண்டாகக்கலந்திருக்கும், நான்காவது கலியுகம், அது தாமசகுணந் தனியாயிருக்கும் அந்தத் தாமசகுணத்தினுல் வர்ணுசிரம குலாசாரகர்மங்களும், குலதர்மாசாரவிதி நிஷேதங்களும், அடியோடே சூன்யமாயிருக்கிறது. அதனுல் கலி. கலியினுல் கொலைகளவுகள் காமம் குருநிந்தை சூதுமுதலான துஷ்கர்மங்களுந் துராசாரங்களுமாய் அக்கிரமமேலிட்டுச் சரீரமே நித்தியம், போகமே மோக்ஷம் இந்தப்படி விபரீதபுத்திகளாய் தாபத்திரயாதிகளோடு கூடிய சம்சாரமான சமுத்திரத்தில் பட்டிருகரையுங் காணுமல் அலையும்பேர்கள் அதிகமாயிருக்கும். இதைத்தாண்டுமுபாயம் முன்கூறிய படியுள்ள சற்குரு பக்தி விஸ்வாசமும், வைராக்கியமும், பகவன் நாமசங்கீர்த்தனங்களைக்கொண்டும் அதிப்பிரயத்தனமில்லாமல் மறுகரைதாண்டிச் ஜீவன் முத்தியடையலாம் சந்தேகம் வேண்டாம்.

ஓ மனமே கேள்! இந்த வுலகமானது அனேகவிதமான அண்டகோளமும் அனேகவிதமான பூதகோடிகளுமிருக்கிறது ஆனுலுமிதுகளைச் சுவர்க்கம் பூமிபாதாளமாய் மூன்றுலகமாயும் அண்டசம் சுவேதசம், சராயுசம், உற்பிசம் இந்தப்படி நான்குவகைப் பூதகோடிகளாயுமிருக்கிறது. இதுகளிற் சிறந்தது பூமி, இந்தப்பூமியிலும் சிறந்தது ஜம்புத்தீவு, ஜம்புத்தீவு என்பது பாரதகண்டம், இதுவே புண்ணியக்ஷேத்ரம், இந்தப் புண்ணிய க்ஷேத்ரத்தில் புல்லாய்ப்பிறந்தாலும் புண்ணியம். முன்கூறிய நான்குவகைப் பூதங்களிற் சிரேஷ்டமானது மானிடஜன்மம். அங்ஙனமப்படியிருக்க இந்தப் புண்ணிய க்ஷேத்ரத்தில் வந்து மானிடஜன்ம

மெடுப்பது அதிதுர்லபம். இது கிடைப்பதறிது, ஆனாலுமிப்படிக்கொத்த புண்ணிய க்ஷேத்ரத்தில் மானிடனாய் வந்து பிறந்தாலும், புண்ணியம் பாபம் சாமான்யம் இந்தப்படி மூன்றுவிதமான கர்மங்களைச் செய்துக் கொண்டு அடிக்கடி நரகம், சுவர்க்கம், நரஜன்மமடைவது சுபாவீகம், ஆத லாலிந்தப் பாரதகண்டத்தில் மானிட ஜன்மமும் கிடைப்பதறிது. அதவா அப்படிக் கிடைத்சாலும் நரகத்திலும் சுவர்க்கத்திலுமலைவதே சுபாவீகம். அங்ஙனம் எப்படியெனில் அகாதமான ஜலத்தில் ஒருவன் தப்பிவிழுந்து விட்டால் அவனுக்கு அந்த ஜலமே சகாயமாயும், கொலையாளியாயுமிருக் கும். அதெப்படி யெனில் ஜலத்தில் விழுந்தவன் கீழே பூமிவரைபோய் உடனே மேல்வருவான். உடனே கீழேபோவான். இந்தப்படி மூன்று தரம்போய்வந்து சாகிறது சுபாவீகம். எப்படியெனில் இந்தப் பாரதகண்ட மான புண்ணிய பூமியிலிருந்தும் புண்ணியம் செய்தவர்க்குச் சுவர்க்கமும் பாபம் செய்தவர்க்கு நரகம். அந்தப் பாபத்தினாலே அனேக கோடிஜன்மம் நரகமனுபவித்துப் புல்லாய்ப், புழுவாய் மிருகமாய்ப் பலவிதமான ஜன்ம மெடுத்து மானிடனாய்ப் பாபஞ்செய்து மறுபடியும் நரகத்திலே விழுகிறது. நல்லது செய்பவனுக்கு நல்ல நரனாய், இந்திரனாய், பிரம்மாவாய், விஷ்ணு வாய், சிவனாய், மேல்லோகம் போகிறது சுபாவீகம். இப்படிப் புண்ணிய பாபமிரண்டும் மேலுங்கீழும் மத்திய பாகமும்விட்டு மோக்ஷமடைவதே க்ஷேமமென்று அறிந்த மகாத்துமாக்களுக்குச் சொல்லுகிறேன் கேளும். புண்ணிய பாபமிரண்டும் நரகசுவர்க்க மிரண்டுமுள்ள சங்கற்பத்தைவிட்டு என்றைக்குமுள்ள பிரம்மானந்த மடையவேண்டுமென்றும் நினைந்த அப் படிக்கொத்த குருவையடுத்து நான் என்பொருள், என்மனைவி, மக்கள் இப்படிக்கொற்ற ஈஷணாத்திரயங்களெல்லாம் நமக்குத் துக்கமென்று நினைத்து அந்தக் குருவின் திருவடியில் அர்ப்பனஞ்செய்துத் தூரத்தள்ளி விட்டு ஆனந்தமாயிருக்கும் சத்தியமாயும் நித்தியமாயுமுள்ள சற்குருவைப் பாரும் மனம் நிர்மலமாகும் அப்போது நித்தியானந்த கைவல்லிய பதமடையலாம். சந்தேகம் வேண்டாம். இப்படியிருப்பதாதலால் நிஷ்காம புத்தியாய்ப் புண்ணியபாப மிரண்டையும்விட்டு சற்புத்தியோடுங்கூடி ஒரு சற்குருவையடுத்துப் புண்ணியபாப மிரண்டையும் அந்தச் சற்குருவிடத் தில் சமார்ப்பனம்பண்ணி சற்குரு பக்தியோடிருப்பதே ஸ்ரேயம். இதே சத்தியஞானம், இதனால் நிர்மல சகிதமாயும், நித்தியானந்தமாயுமுள்ள கைவல்லிய பதமடையலாம் சந்தேகம் வேண்டாம்.

மனம் இதைக்கேட்டு பரிசுத்தமாய் நித்திய பரிபூரணானந்த சமுத் திரத்தில் மூழ்கிப் பரமானந்த பக்திபாய் அறிவை வணங்கி, ஓ ஆண்டவ னே ? தேவரீர் திருவருளால் உண்மைநிலை யிதுவென்று உணர்ந்தேன்.

எல்லாம் பரிபூரணனந்தப் பொருளே நாமென்றறிந்தேன். சந்தேகமெல்லாந்தீர்ந்து தெளிவடைந்தேன். ஆனாலும், அடியேனுடைய சந்தேகமாவது ஆகாசம்போல் எங்கும் பரிபூரணமான பரமாத்மா ஏகமென்றும் அதைத்தவிர வேறே அணுவளவு மில்லையென்றும், முன்கூறியது உண்மைநிலை யிதுவென்றுமறிந்தேன். ஆனால் அனாதியான வாசனையோடு கூடிய ஜீவர்கள் அநேகவித பேதமாய் வேறாகப்பந்தப்படுவதற்குக் காரணமென்னவென்று கேட்க அறிவுகூறியது.

ஓ மனமே கேள்! எங்கும் பரிபூரணமான பரமாத்மாவானதற்கு உற்பத்தி, நாசம், பந்தம், மோக்ஷம். விர்த்தி, க்ஷயங்களை இதுகளொன்றுங்கிடையாதென்பது எதார்த்தக்ஞானிகளுடைய அபிப்பிராயம். ஆனாலும் பரமாத்மாவேறே, ஜீவாத்மாவேறே, ஜீவனுக்குப் பந்தமோக்ஷ சுகதுக்காதிகள் சமஸ்தமும் உண்மையாய்த் தோற்றுவது சுபாவீகம். ஆனாலும், அது உண்மையல்ல, மாயையால் ஆகந்துகமாய்த் தோற்றுவதாமென்றும் அது அப்படித் தோற்றுவது, அக்ஞானிகளுடைய மனதிற்குத் தோற்றமல்லாமல் எதார்த்தமல்ல வென்பதாம். எதார்த்தக்ஞானிகளுடைய அபிப்பிராயம் என்னவென்றால் மாயாப்பிரதி விம்மிதமாய்ச் சிதாபாசனுயிருக்கும். ஜீவர்களுக்குப் பந்தமென்பது சொர்ப்பனம் போலவும், மோக்ஷமென்பது உணருவதுபோலவுமென்றறிக. ஜீவபாவனையாவது மனமொன்றுதான். மனதினுடைய ஆசாசங்கற்பமாம் பந்தமென்றறிக. அதாவது மனம் ஆத்மாவைப் பின்னிட்டு அனாத்ம சங்கற்பமடைவதாம் பந்தமென்றும், அந்த அனாத்ம சங்கற்பம்விட்டு ஆத்ம சங்கற்பமடைவதாம் மோக்ஷமென்றும், சுருதிப்பிரமாணங்களிலும் பெரியோர்களாலும் கூறப்படுகிறது.

மனம் ஓ சுவாமி! ஜீவாத்மாவேறே, பரமாத்மாவேறே, இந்தப்படி வேறுவேறாகத் தோற்றுவதற்குக் காரணமென்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அப்படி வேறவேறாகத் தோற்றுவது மனதினுடைய அக்ஞானமாம். அதாவது பூரண ஆத்மாவிலிருந்தும், ஜீவர்கள் வேறாகத்தோற்றுவது எப்படியென்றால் ஏகமான சூரியபகவானை ஜலமிருந்த விடமெல்லாம் பார்த்தால் அநேக சூரியபகவானைக் கண்டது போல ஏகமாம். ஆத்மாவை மூன்றுவிதமான மாயா குணமாயும், அநேகவித பேதமாயுமுள்ள ஜலத்தில் அநேகம் ஆத்மாவைக்கண்டது சரிதான். அதாவது முன்கூறிய முக்குணங்களில் சாத்வீகமான குணம் தெளிவுடைய ஜலம்போல் அந்தத்தெளிவுடைய ஜலத்திற்கண்ட பூரணப்

பிரகாசமாம் திருமூர்த்திகளுமென்றறிக. இரண்டாவது ராஜசகுணம் கலக்கமான ஜலம்போல் அந்தக் கலக்கமான ஜலத்திற்கண்ட பூரணப் பிர பிரகாசமாம் ஜீவர்களென்றறிக. மூன்ருவது தாமசகுணம். அதிகக்கலக்க மாய்ச் சேராயிருந்த ஜலத்திற்கண்ட பூரணப்பிரகாசமாம். சரீராதிப் பிரபஞ்ச வஸ்துக்கள். இதனுடைய உண்மை. அன்புற்றுப் பார்த்தால் ஆகாசத்திற்கண்ட சூரியனைத்தவிர ஜலத்திற் சூரியன் கிடையாதென்பது நிச்சயமாம். ஆனாலும் ஜலத்திற்குள் கண்ட சூரியனைப்பார்த்தால் அதற் குக் காரணம் ஆகாசத்திற்கண்ட சூரியன் உண்மையாமென்றறிவதுபோல் மனதிற்குள்ளே சாயல்போலிருந்த ஆத்மாவைப்பார்த்தால் அதற்குக் காரணம் பரிபூரணமாயுள்ள பரமாத்மாவென்றறியலாம் சந்தேகம் வேண் டாம். ஜலமில்லாத பாழான பூமியில் சூரியனுடைய பிரதிபிம்பங் கிடை யாததுபோல், திரிகுணமயமான மனக்கலக்கமற்று நிர்மலமான யிடத்தில் ஜீவனேது? ஜடமேது? ஜகத்தேது? பூரணவஸ்துவானதற்கு ஒரு பேதமுங், கூடுதலுங், குறைவும் ஒரு காலத்திலும் நாசமுங்கிடையாது. இந்த அனுபவம் பரமதேசிகர்தன் திருவுளமாம். மஹாவாக்யமான தத்வ மசியின் தாற்பரியமறிந்தவாளுக்குச் சந்தேகம் அணுவளவுங் கிடையாது.

ஓ மனமே கேள்! சராசரத்தையும் ஒரு குருவாகக் கண்டவன்தான் தன்னைக்கண்டவன். சராசரத்தையுங் கும்பிட்டவன்தான் தன்னைக்கும் பிட்டவன். சராசரத்தையும் பரிபூரணமாகக் கண்டவனுக்கு நானென்கிற அகங்காரம் அணுவளவுங் கிடையாதென்பது நிச்சயம்.

மனம் ஓ சுவாமி! அகங்காரிகள் இன்னாரென அருள்செய்யவேண்டு மென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அகங்காரிகள் யாரென்ருல் மூன்றவஸ்தையோடு கூடிய ஜீவாத்மா ஒன்றேயாம் வேறில்லை. ஆதலால் மூன்றவஸ்தையும் தள்ளிவிட்டால் ஜீவன் முக்தனும் என்பதற்குச் சந்தேகம் வேண்டாம். மூன்றவஸ்தையின் விபரம் சாக்ர, சொர்ப்பன, சுழுப்தி இதுகள் மூன்று மாம். அதாவது சாத்வீகம், ராஜசம், தாமசம் இம்மூன்று குணங்களோடு கூடியும் இரவும் பகலுமாயிருக்கும். இதில் சாக்ரம், சொர்ப்பனம் இரண் டவஸ்தையிலும் மூன்று மூன்றவஸ்தையோடு கூடியிருக்கும். இதில் சுழுப்தியில் பேதங்கிடையாது. அதாவது சாக்ரா, சாக்ரம், சாக்ர, சொர்ப்பனம், சாக்ர, சுழுப்தி, சொர்ப்பன சாக்ரம், சொர்ப்பன சொர்ப்ப னம், சொர்ப்பன சுழுப்தி, தனியே சுழுப்தியொன்று ஆக இந்த எழு அவஸ்தையும் ஜீவசிருஷ்டியாமென்றும், அது மனசங்கற்பமாமென்றும், இதுவே ஜீவனுக்குப் பந்தமாமென்றும், இதற்கு மூலகாரணம் மனசங்கற்ப

மாமென்றும், மனசங்கற்பமற்றால் மூன்றவஸ்தையும்விட்டுச் ஜீவன் முக்தனுமென்றும், சுருதிப்பிரமாணங்களிலும் மஹான்களும், கூறி இருக்கிறது உண்மை. உண்மைசொல்லாத சிஷ்யனுக்கு உபதேசமாகா. உண்மை சொன்னால் கேளாத சிஷ்யனுக்கு உபதேசமெதற்கு ? உண்மை விளங்காத சிஷ்யனுக்கு உபதேசமானாலும் உண்மைநிலை யடையான். வாக்கு சத்தியமானால் மனம் உண்மைநிலை யடையலாம்; சந்தேகம் வேண்டாம்.

மனம் ஓ சுவாமி ! மேற்கூறியபடி ஜீவனுக்குப் பந்தகேதுவான எழவஸ்தையும் விட்டுவிடுவது எப்படியென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! முன்கூறிய எழவஸ்தையிலும் பிரதானம், சாக்ரா, அவஸ்தை, அந்தச் சாக்ரா அவஸ்தையிலுள்ள மூன்று அவஸ்தையும், நாசமானால் முன்கூறிய எழவஸ்தையும் நசித்துப்போகும்.

மனம் ஓ சுவாமி ! இந்த மூன்று அவஸ்தையும் விட்டுவிடும் உபாயமெப்படி அதையருள்செய்ய வேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! மனதைச் சாக்ரா, சாக்ரமான அவஸ்தையில் ஸ்திரமாய் நிறுத்திக் கடவுளை உபாசித்தால் மற்ற இரண்டவஸ்தையும் அடியோடு நசிக்கும். சாக்ரா சாக்ரமடைவதெப்படி யென்றால், நிஷ்காமியாய் சித்தம் பரிசுத்தமாக்கி ஆத்மானாத்மா விசாரணைசெய்வதாம். அதாவது வாக்கு மனக்காயங்களினாலும், ஆத்மாவைப் பக்தி செய்வதாம். நானாவிதத்திலுங் கடவுளின் திருவடித் தியானஞ் செய்வதுதான். சாக்ரா, சாக்ரம் இனி சாக்ர சொர்ப்பனமாவது நானாப்பிரகாரமுள்ள போகத்தில் இச்சையும் காமசங்கற்பமுமாம். சாக்ர சுழுப்தியாவது முன்கூறிய இரண்டவஸ்தையும் மறந்து, மனச்சங்கற்பமற்றதுபோல் அரைக்கால் நிமிஷம் மயக்கமாயிருந்ததாம். முன்கூறிய சாக்ரா சாக்ரமாவது துரிய நிலையடைவதாம். அதாவது முக்குணத்திற்கும் மூன்றவஸ்தைகளுக்கும் முக்காரணங்களுக்கும்,முத்தொழில்களுக்கும்,மும்மலங்களுக்கும்மும்மூர்த்திகளுக்கும், அதீதமாயும், பரிசுத்தமாயும் ஆகாசம்போல் பரிபூரணமாயுமுள்ளதாம் துரியநிலை. மனமடங்கி ஜீவபாவனைவிட்டுத் துரியநிலையடைவதாம். அனர்த்தநிவர்த்தி, அனர்த்தநிவர்த்தியே, ஆனந்தப்பிராப்தி, ஆனந்தத்திற்கதீதமே துரியாதீதம். அதவாது அதிசாக்ரா சாக்ரமென்றறிக. எங்கும் பரிபூரணமாம். ஆகாசத்தில் சர்வ பூதங்களுங் கலந்திருந்தும், பூரணாகாசத்திற்குப் பற்றில்லாததுபோல் எங்கும் பரிபூரணமானபரமாத்மாவுக்குள் சர்வபூதங்களும் பூதங்களுக்குள் பரமாத்மாவும் பூரணமாய்ப்பற்றற்

றிருக்கும். மலமற்ற ஆகாசம்போல் எங்கும் நிறைந்த பரமாத்மா ஏகமாயெதற்கும் இடங்கொடுத்தும், எதிலும் பற்றற்றதாயும், பரமானந்த பரமஜோதியாயுமுள்ள பரமாத்மா நித்திய பரிபூரணமாம் என்பது சத்தியம். நாக்கினல் ஒரு பொய்யும் சொல்லாமலிருந்த தினமே புண்ணியதினம். சரீரத்தினல் ஒரு பொய்யும் செய்யாமலிருந்தால் அது புண்ணிய க்ஷேத்திரமாம். மனதினல் ஒரு பொய்யும் நினையாமலிருந்தால் அது சுவர்க்கத்திலும் மேலாம் என்பதற்குச் சந்தேகம் வேண்டாம். கர்மத்தில் சிரத்தையுடையவாளுக்கு முக்தி வெகுதூரமாம் என்றும் கர்மசங்கற்பம்விட்டு ஸ்ரீ சற்குரு சங்கற்பமானல் ஜீவன்முக்தி சமீபமாமென்றும் பெரியவாள் சம்மதம்.

மனம் ஓ சுவாமி! தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய மஹா வாக்கிய சாரோபதேசங்களைக் கேட்டு அடியேனுடைய சந்தேகமெல்லாந் தீர்ந்து விட்டது. என்னுடைய சம்சாரமும் தூரத்தள்ளி சம்சாரத்திற்கேதுவான ஆடு, மாடு, மனைவி, மக்கள், வீடு முதலான தன தான்யாதிகளும், எல்லாம் கைவிட்டேன் ஆனாலும் சரீரமொன்றிருக்கிறது. அதானது நானெனதென்கிற பாவனையோடுகூடிய மனமொன்றிருக்கிறது. இதுகளையும் விட்டுவிடுமுபாயம் யாது இதின் சொரூபமாவதெது வென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! நானெனதென்கிற அகங்கார அகமமதையோடு கூடிய மனதின் சொரூபத்தையும், அதன் தொழிலையும் பிரம்மாதி தேவர்களானாலும், ஜனகாதி யோகிகளானாலும், சொல்லத்தகுந்ததும் காணக்கூடியதுமல்ல. அதைக் கண்டுபிடித்து நாசமாக்குவது மகாப்பிரயாசம். ஆனாலும் சுவர்க்கம் பூமிபாதாளம் இம்மூவுலகமும் அதனுட சொரூபமும் பார்த்துக் கண்டால் மனதையும், அகங்காரத்தையும் பார்க்கலாம். மனதையும், அகங்காரத்தையும் பார்த்துக் கண்டால் மூவுலகத்தையும் பார்க்கலாம் சந்தேகமில்லை. அதாவது சர்வப்பிராணிகளுக்கும் மனம் ஒன்றுதான் அது பூர்வத்தில் ஏகமாயும், ஆகாசம்போல் பரிபூரணமாயும், பரிசுத்த நிர்மலமாயுமுள்ளதாம் மனமென்றறிக. அங்ஙனம் ஏகமாயும், பரிசுத்தமாயுமுள்ள மனம் அநேக நாமரூபங்களாயும், அநேகவித பேதமாயுந் தோற்றுவதற்குக் காரணமென்னவெனில் மூன்று மாயா குணபேதத்தால் தோன்றுவதாம். ஆதலால் இந்த மூன்று குணந்தான் மனதை ஒருவருக்கும் பார்க்கவொட்டாமல் மறைக்கப்பட்டதென்றறிக. அந்த மூன்று குணமானது சாந்தகோர, மூடமான, சாத்வீக, ராஜச, தாமசமாயும் உத்தம, மத்திம, அதமமாயும், சிருஷ்டி ஸ்திதி சங்காரமாயும், சுகதுக்க மிச்சிரபேதானுபவ

மாயும், சுவர்க்கம் பூமிபாதாளமாயும், சாக்ர, சொர்ப்பன, சுழுப்தி இம் மூன்றவஸ்தையோடு கூடியும், பந்தமோக்ஷமிரண்டுக்கும் மத்தியபாகமாயு மிருக்கிற அகங்காரத்தையும், மனதையும், ஒருவருக்கும், பார்க்கக்கூடிய தல்லவென்று முன்கூறிய தாற்பரியம்.

மனம் ஓ சுவாமி! இப்படிக்கொற்ற அகங்காரத்தையும், மனதையும், பார்க்கும்பொருட்டு மார்க்கமுண்டாவென்று கேட்க அறிவு கூறியது

ஓ மனமே கேள்! மனதின் தொழிலற்றால் மனம் பரிசுத்தமடை யும் மனம் பரிசுத்தமடைந்தால் மனதை மனதிற்குப் பார்க்கக்கூடும் சந்தே கம் வேண்டாம்.

மனம் ஓ சுவாமி! மனதின் தொழிலாவதெதுவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மனதின் தொழிலாவதெது வென்றால் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் மூன்றுமாம். அதாவது முன்கூறிய முக்குணங்களில் ராஜச குணமானது மனதின் மத்தியபாகத்திலும் சாத்வீக குணமானது அதன் வலபாகத்திலும், தாமசகுணமானது. மனதினுடைய இடபாகத்தி லுமிருக்கிறது. ஆனாலும் அந்த மனதின் மத்தியபாகத்திலிருந்த ராஜச குணமானதை ஸ்திரமாய் நிறுத்திக்கொண்டு அந்த ராஜசகுணம் மேன்மே லும் விர்த்தியாகும்பொருட்டுக் காமியார்த்தமான கர்மங்களில் அதிகச் சிரத்தையோடு கூடியும் கர்மஞ்செய்வதாதலால் அந்த ராஜச குணமானது மேன்மேலும் விர்த்தியாகிறது. அதாவது அநேகவித பேதமாயும், அநேக நாமரூபங்களைச் சங்கற்பஞ் செய்வதும், ராஜசகுண விர்த்தி சுபாவீகமென்ற றிக. இந்தப்படி அநேககோடி கற்பகாலமானாலும் குலாலசக்கரம்போல் சுற்றிச்சுற்றி சிருஷ்டி ஸ்திதி சங்காரமான கடலில் முழுகி இந்தப்படி அடிக்கடி ஆவதும், அழிவதும் ஆதியந்தமில்லை. இதுவே ராஜச குணம் இனி சாத்வீக குணமானது ராஜச குணத்தின் வலபாகத்திலிருந்துக் கொண்டு ராஜசகுணத்தினால் சிருஷ்டிக்கப்பட்டவைகளை யெல்லாம் ரக்ஷைசெய்வது சாத்வீக குணவிர்த்தியின் தொழிலாமென்றறிக. மூன்றா வது ராஜசகுணத்தின் இடபாகத்திலிருந்த தாமசகுணமானது முன்கூறிய சிருஷ்டி ஸ்திதி, இதுகளிரண்டையும் சங்காரம் பண்ணுவதாம். தாமச குணத்தின் தொழிலென்றறிக. இந்தப்படி குணம் மூன்றும் மனதிற் குள் கலந்திருந்து அடிக்கடி சிருஷ்டி ஸ்திதிசங்காரங்களைச் செய்தும், அதனால் ஜீவன் ஆசாபாசத்திற் கட்டுப்பட்டு அநேகவித சங்கற்ப விகற்ப மடைவதும் மனதின் தொழிலாமென்றறிக இந்தப்படியுள்ள முத்தொழி

லும்விட்டால் மனம் பரிசுத்த நிர்மலமாம் அதாவது குணம் மூன்று மடங்கிவிட்டால் மனதின் தொழிலறும். மனதின் தொழிலற்றால் அது பரிசுத்த நிர்மலமாமென்றறிக. ஆனாலும் இந்தமூன்று குணத்தையுமடக்குவது மஹாப்பிரயாசமாமென்றும் அதைத் திருமூர்த்திகளாலும் அசாத்தியமாமென்றறிக. ஆனாலும் இதுகளில் ராஜச குணத்தை முன்னேவிலக்கிவிட்டால் மற்றிரண்டு குணமுந் தானேயடங்கும். விதியை வெல்லுவது அசாத்தியம். ஆனாலுமிந்த உலகத்தின்கண் சர்வப்பிராணிகளுக்கும் சதா சம்சார துககத்திற்கேதுவாயுமிருப்பது ராஜச குணவிர்த்தியொன்றுதான் சந்தேகம் வேண்டாம். ராஜச குணமில்லாவிட்டால் உற்பத்தியேது? உற்பத்தியில்லாவிட்டால் உலகமேது? உலகமில்லாவிட்டால் பந்தமேது? மோக்ஷமேது? சுகதுக்காதி நரகசுவர்க்கமேது? ஆதலால் ராஜசகுண விர்த்தியால் சிருஷ்டிக்கப்பட்டதுகளாம். நாமரூபாதி சமஸ்தப் பிரபஞ்ச வஸ்துக்களுமென்றறிக. அதாவது ராஜச குணத்திற் பிறந்த ஜீவர்களெல்லாம் ராஜச குணத்திலே வளர்ந்து ராஜச குணத்திலே இருந்து அந்த ராஜசகுணம் மேன்மேலும் விர்த்தியாகும் பொருட்டுப் பேராசையோடு கூடிக் காமியார்த்தமாயுள்ள கர்மங்களை அதிகச் சிரத்தையோடுங்கூடி அடிக்கடி செய்து பழகிவருவதாதலால் அந்த ராஜச குணம் மேன்மேலும் விர்த்தியாய்க்கொண்டே இருக்கும். அந்த ராஜச குண விர்த்தியினால் விளைவதெல்லாம் ராகத்துவேஷாதி சம்சார பலன்களாம். அதனால் மஹா மோகமடைந்து கொடிய பாபத்திற்கேதுவான கொலைகளவுகள் காமம் குரு நிந்தை முதலான பஞ்சபாதகர்களாய் ஸ்திரீபோகாதி விஷயங்களிற் பேராசைகொண்டு சதா துக்கிகளாயிருக்கிறது. அது அப்படியிருக்க அந்தப்போகசுகத்திற்கு எதானாலும் விரோதம் நேரிட்டால் தன்னிடபாகத்திலிருந்த தாமசகுணத்தை வரவழைக்கும். தாமச குணம் மிகுதியானால் மற்றிரண்டு குணத்தையும் சங்கரிக்கும். அப்போது தாமச குணமானது அமாவாசையும் இராத்திரியும் மேகங்களுங்கூடி நிர்மலமாயிருந்த ஆகாசத்தில் இருள் தோன்றியதுபோல மனம் தாமச அந்தகாரமாய் வந்துவிடும். அதனால் கர்வம், குரோதம், அகங்காரம், இத்தியாதி குணங்கள் மேலிட்டுக் கொடுங் கோபிகளாய்ப் புத்தி சூன்யராய் சம்சார சாகரத்தில் வீழ்ந்து துக்கிகளாய் மேன்மேலும் ஜனனமரணாதி துன்பங்களுக்கும், ரௌரவாதி நரகங்களுக்கும் ஏதுவான சம்சார சாகரத்தையடைவார்கள். அற்ப சுகமாயும், அற்ப ஆயுசாயுமுள்ள தேகேந்திரியாதிப் போக சுகத்திற் பேராசை கொள்வதுதான் ராஜச குணவிர்த்தியின் சுபாவீகமென்றறிக. அந்த ராஜச குணவிர்த்திகளுக்குப் பங்காளிகளாயும், பகையாளிகளாயும் பதின்மூன்று ராக்ஷதாள் வந்தடையும். அதானது

ராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம், ஈரிஷை. அசூசை, டம்பம், தெற்பம், அகங்காரம் இவை பதின்மூன்றுமா மென்றறிக. இதுகளில் ராகத்தின் சொரூபமாவது பெண்களிடத்தி லுள்ள அன்பு. அதவாது மாதர் போகத்தில் இச்சைகொள்வதாம். அந்த இச்சையையடையாமற் போனுல் அதற்கு விரோதஞ் செய்தவாளிடத்தில் துவேஷமடைந்து ராவணுகாரமாய் வந்துவிடும். அதனுல் காமமுங் குரோதமும் மேலிடும். அந்தக் குரோத நிமித்தம் லோபமும், மோகமும் மேலிடும். அந்த மோகநிமித்தம் விட்டில் பூச்சியானது தீபத்தைப்பார்த்து இது நல்ல பழமாமென்று நினைந்து ஆசையையடைந்து அந்தத் தீபத்திலே வீழ்ந்து நாசமடைவதுபோல் பொம்மையைப்போல் மாயாரூபமான ஸ்திரீ களைக்கண்டு மோகித்து அந்தக் காமாக்கினியில் வீழ்ந்து நாசமடைவார்கள். அதாவது மோக்ஷத்திற் கிச்சையுடையவாள் முதலாவது ஸ்திரீகளோடு கூடியுள்ள சிற்றின்பமான போகத்திலாசையும், ராஜச குணத்தையும் அடி யோடே தூரத்தள்ளிவிட்டு கடவுளை உபாசித்தால் சுகஜீவிகளாயும். சிரஞ் சீவிகளாயும் பிரம்மானந்தமாயுமிருக்கலாம். ஆதலால் ராஜச குணம் அடி யோடே நசித்தால் முன்கூறிய ராகத் துவேஷாதிகள் வந்தடைவதற்கிட மில்லை. ஆனுலு மிப்படிக்கொத்த மஹா பலமுடைய ராஜச குணத்தைப் போக்கடித்தல் பிரம்மாதி திருமூர்த்திகளுக்கும் அசாத்தியமாமென்றமுன் கூறி இருக்கிறது. அதாவது சுருதிஸ்மிருதி வேதசாஸ்திர புராணுதி காசங்களைக் கற்றுணர்ந்தாலும் இலக்ஷங்காவியங்களை முறையாகப் படித்தா லும், அக்ஷரங்களுடைய இலக்ஷணங்களை நன்ருய்த் தரித்தாலும், அன்ன தானம், வஸ்திரதானம், சுவர்ன தானம், பூதானம், கோதானம், கன்னிகா தானம் இந்தப்படியுள்ள மஹா பஞ்சதானங்களைச் செய்தாலும் மற்றும் அநேக கோடி யெக்ஞாதி கர்மங்களைச் செய்தாலும், தலைகீழாய்க் கோடி கற்பகாலங் கொடிய தவங்களைச்செய்தாலும், பஞ்சாக்கினி மத்தியிலிருந் தாலும், திருமூர்த்திகளை உபாசித்தாலும், இன்னும் அநேக சிலாக்கியமான கர்மங்களைச்செய்தாலும், ராஜச குணமானது அணுவளவானுலும் நசியா தென்பது நிச்சயம். அதுவுமல்லாமல் இதுகளினுல் ராஜச குணமானது மென்மேலும் வளரும். ராஜச குணமிருந்தமட்டும் உலகவாசனை விடா. உலகவாசனை இருந்தமட்டும் ஜனனமரணுதி சம்சார துன்பந்தீரா. ஆத லாலிந்த ராஜச குணத்தை அடியோடே தூரத்தள்ளிவிட்டு சாந்தமாய் நிர்விஷயானந்த சுகமனுபவிக்கும் பொருட்டு சன்மார்க்கமானது முதலா வது விடைய வைராக்கியத்துடன் நிராசையாய்ப் பிரம்மக்ஞானம் குரு பக்தியுமுடைய ஒரு பரமாச்சாரியனை அடுத்து அதிக அன்புடன் பரம பக்தி விஸ்வாசமாய் அதிக சிரத்தையோடுங்கூடி பாதகாத்துப் பணிவிடை

செய்து பழகிவருவதும், அந்தத் திருவடியைத்தியானிப்பதும், பூசிப்பதும் சர்வதா குரு திருநாமசங்கீர்த்தனங்களைப்படிப்பதும், இந்தப்படி சதாபழகி வருவதானல் மனம் பரிசுத்தநிலையை அடைந்து ராஜச குணகர்மவாசனை அடியோடே நசிக்கும். ராஜச குணகர்மவாசனை இல்லாவிட்டால் தாமச சாத்வீகமும் தானே நசித்துவிடும். இந்தப்படி மூன்று குணங்களுமடங்கி விட்டால் மனம் பரிசுத்த நிர்மலமாய் ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற லாம். ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற்றல் பரமானந்தபதமடையலாம். சந்தேகம் வேண்டாம். இந்தப்படியெல்லாம் அநுஷ்டானஞ் செய்து பழகிவருபவர்களுக்கு இதைத்தவிர வேறொரு கர்மமுஞ் செய்யவேண்டிய தவசியமில்லை என்பது நிச்சயம். அதாவது சர்வசங்கபரித்தியாகமே ராஜசகுண நிவர்த்தியென்றும் சாதுக்களின் சம்சர்க்கமே பரிசுத்தமான சாந்தகுணவிர்த்தியென்றும் பரிசுத்தமான சாந்தகுண விர்த்திபடைந்தால், நிர்க்குணத்தியானஞ் செய்யக்கூடுமென்றும் நிர்க்குணத்தியானஞ் செய்து பழகிவருவதானல் நிர்மலச்ஞானமடையலாமென்றும், நிர்மலக்ஞான மடைந்தால் பராபரமாயும், பரிபூரணாநந்தமாயுமுள்ள பரமாத்மாவினிடத் தில் ஐக்கியமாய் நித்தியானந்த கைவல்லிய பதமடையலாமென்பது இதில் முன்கூறிய தாற்பரியம் ஆதலால் நீரும் பாலும் சரியாய்க் கலந்த தைப்போல் ஜீவன் பரமாத்மாவிரண்டரக் கலந்தால் பரமாத்மாவாம். அது ஏகமாமென்றறிக.

மனம் ஓ சுவாமி! ஜீவன் வேறு யான்வேறாகத் தோற்றுவதற்குக் காரணம் மனமொன்றேயாம். சந்தேகம் வேண்டாம். அந்த அசுத்த மனம் சுத்தமானல் ஜடமேது? ஜகத்தேது? பந்தமேது? மோக்ஷ மேது? ஜீவபரபேதமேது? இதுகளெல்லாம் அசுத்தமாயையால் தோன்றுவதாமென்றும் அசுத்தமாயயை நீக்கிப் பரமானந்த பதமடையும் பொருட்டுச் சன்மார்க்கமாம். இதன் முன்கூறிய தாற்பரியம். இதைத் தவிர பிறவிக்குருடனுக்கு நல்வழிகாட்டினலும் தெரியாதென்பது நிச் சயம். பிறவிக்குருடன் என்பது தாமசகுணமுடையவன். ஆதலால் பிறவிக்குருடை மாற்றுவதற்கு மருந்து கிடையாது. ராஜச குணமுடைய வரென்றல் வெங்குருடாளாமென்றறிக. அந்த வெங்குருடைப் போக்கு வதற்கு நல்ல மருந்திருக்கிறது.

மனம் ஓ சுவாமி! அம்மருந்தை அடியேனுக்கு அருளவேண்டு மென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ராஜச குணவிர்த்தியினல் வந்த மாயாமோகாந்த காரமான திமிரம் நீங்கி இரண்டுகண்ணும் பரிசுத்தமாய்ப் பார்க்கும்

பொருட்டு மருந்தானது யாதெனில் விஞ்ஞானமென்ற குளிகை. அக் குளிகையைக் கண்ணிலே எழுதப்பட்டால் அஞ்ஞானமென்கிற திமிரம் நீங்கி ஞானம் ஆகாசம்போல் விளங்கி எங்கும் வெட்டவெளியாயும், ஸ்வயம் பிரகாசமாயும், ஆகாசமும் பூமியும் பார்க்கலாம். அந்த ஆகாசத்திலும் பூமியிலுமுள்ள சர்வ வஸ்துக்களையும் பார்க்கலாம்.

மனம் ஓ சுவாமி! இம்மருந்தை உபயோகித்தால் பத்தியமேதாவதுண்டா? அப்படி யிருந்தால் அதை அருள்செய்யவேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ரோகிகள் மருந்து உபயோகிக்கும்போது பத்தியமிருக்கவேண்டுவதவசியந்தான். சில நாள் வைத்தியர் சொற்படி பத்தியம் கிரமமாக இருந்தால் வியாதி சுகமாகுமென்பதற்குச் சந்தேகமில்லை. பத்தியமாவது:—உப்பு, காறம், புளிப்பு முதலான தாமச, ராஜச, ரஸவர்க்கங்களைச் சேர்க்காமல் சாத்வீகமாம். பால்முதலான நான்கு சாதனங்களைச் சேர்க்கவேண்டும். நான்கு சாதனங்களாவது:—வைராக்கியம், விவேகம், இயம, நியம, சமதமாதி, முமுக்ஷுத்துவம் நான்கு சாதனங்களாமென்றறிக. இந்தப்படி பத்தியமிருந்து பழகாதபேர்களுக்கு மருந்து கொடுக்கக் கூடாது. ஏனென்றால் முன்கூறிய நான்கு சாதனபத்தியமிருந்து பழகாத பேர்களுக்கு விவேகாநந்தாமிர்தமாம். மருந்து கொடுத்தால் அவர்களதைக் கையில் வாங்கிக் கீழேபோட்டாலும் போடும். அல்லது அவர்களதைப் பத்தியமில்லாமற் சாப்பிட்டாலும் அந்த வியாதி அதிகமாம். ஆதலால் ரோகத்தை நாடி பார்த்து நிதானமாய் மருந்து கொடுப்பவர்களை நல்ல பரிபக்குவமுடைய வைத்தியர்களென்றும் உலகர் சம்மதம். பவரோகத்தின் நிதானமறியாமலும், அதிகாரத்திற்குத் தகுந்தபடி யல்லாமலும், உபதேசஞ்செய்யும் குருக்கள் மாரும் முன்கூறிய வைத்தியர்களைப்போல் கொலையாளிகளாமென்றறிக. அதாவது பவரோகம் சாந்தமாகும்பொருட்டு அதிகாரத்திற்குத் தகுந்தபடி உபதேசஞ் செய்பவர்களே ஜீவகாருண்ணியமுடைய சத்குருக்களென்றுமறிக. பரமாணுவாயும், பரம்பொருளாயும், பரமானந்த பரிபூரணமாயுமுள்ள பரமாத்மாவில் மனதையடக்கி ஐக்கியமாயிருப்பதே முன்கூறிய பவரோக சாந்தமென்றறிக.

ஓ மனமே கேள்! மனதையடக்கி அந்த மனதினலறிந்த பொருளே பொருள் வேறொருபொருளும்பொருளல்லவென்றும், மஹான்களுடைய சம்மதம். ஐம்புலன்களும் மனதுங்கூடி யறிவதெல்லாம் தேகாதிப்பிரபஞ்ச வஸ்துக்களாமென்றும், ஐம்புலன்களும், மனதும் அடக்கிப் பார்த்தால்

அது நிர்மல பரப்பிரம்மமாமென்றும் மேற்கூறிய தாற்பரியம். சர்வப் பிராணிகட்கும் சரீரத்திற் கண் மூன்ருயிருக்கிறது. அதாவது ஸ்தூலமா யும், சூக்ஷமமாயும், காரணமாயுமிருக்கிறது. இதுகளில் ஸ்தூலமாவது மாமிசக்கண்ணும். அதினுற் காணப்பட்ட வஸ்துக்களேது வென்ருல் சூரியன், சந்திரன், அக்னி நட்சத்ராமுதலான தேஜஸ்களேயும் மற்றுமனேக நாமரூபங்களான ஸ்தூலப்பிரபஞ்சத்தையும் பார்க்கக்கூடும். அந்த மாமிசக் கண்ணிற்குக் கண்ணும் சூக்ஷமமாயுமிருப்பதே மனம். அந்த மன மானது ஆத்மாவினேயும் தேகாதிப்பிரபஞ்ச வஸ்துக்களேயும் அறியப்படும். இதுகளிரண்டிற்குங் கண்ணும் காரணமாயுமிருப்பது ஆத்மா. அதாவது ஞானக்கண். இந்த ஞானக்கண்ணேத்திறந்துபார்த்தால் பூரணனந்த வஸ் துவைத்தவிர அணுவளவும் வேறில்லேயென்றுந்திடப்படும். அதாவது முன் கூறிய மூன்று கண்ணில் ஞானக்கண்ணுவது நெற்றிக்கண். அந்த நெற்றிக்கண்ணேத்திறந்துபார்த்தால் ருத்திரமூர்த்தி சர்வசங்காரகாலத்தில் நாமரூபாதிப்பிரபஞ்ச வஸ்துக்களேயெல்லாம் நெற்றிக்கண்ணேத்திறந்து பார்த்துச் சங்காரமாக்கி தற்சுயம் பரஞ்ஜோதியாய் விளங்குவதுபோல் ஞானக்கண்ணேத் திறந்துபார்த்தால் சர்வயிந்திரியங்களும் ஒடுங்கு நித்தி யாத்மா தானும் ஸ்வயம்பிரகாசமாய் விளங்குமென்றறிக. நெற்றிக்கண் ணனது ஞானக்கண். அதாவது ஐம்புலன்களேயும் மனதினுலடக்கி மனதை ஆத்மாவிலடக்கி ஆத்மாவைப்பரமாத்மாவிலடக்கிப்பார்த்தால் ஆத் மாவைத் தவிர அணுவளவும் வேறே இல்லேயென்பது நிச்சயம்.

மனம். ஓ ஆண்டவனே இப்படிக்கொத்த திடஞ்ஞானமடையும் பொருட்டு முக்கிய சாதனமெதுவென்றுகேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! முக்கியமானசாதனம். ஸ்ரீசற்குரு பக்தி. பக் திக்கு முக்கியமானசாதனம் சத்தியதர்மாதிகளும் வைராக்கியவிவேக இ யாதி சத்விர்த்திகளுமாமென்றறிக. பக்தி முற்றும்போது திருவருள் பெற்று ஞேயமாயுள்ள பரமாத்மஞானமடைந்து முக்தியுந்தானே கைவச மாமென்பதற்குச்சந்தேகமுண்டா? இப்படிக்கொத்தஞானவிஞ்ஞானமிரண் டும் ஸ்ரீ சற்குருவின் திருவருளாலறியப்படுவதல்லாமல் வேறேயொரு கர்மத்தினுலும் அறியக்கூடுவதல்ல. ஆனுலும் நிஷ்காம சற்கர்மத்தினுல் சித்தசுத்தியுடையவாளுக்கு ஸ்ரீ சற்குரு தெரிசனங் கிடைக்குமல்லாமல் காமியகர்மிகளுக்குக் கிடைப்பதறிது. ஏனென்ருல் ஸ்திரீபோகாதி வஸ் துக்களில் பேராசை இருக்தமட்டும் நிஷ்காமம் வராது நிச்சயம். குருவே பரமாத்மாவென்கிறநிச்சயமும் பக்திவிஸ்வாசமுமில்லாதவர்களுக்கு அரு ளுங்கிடையாது. அருள் பொாமற்போனுல் ஞானத்தின்கெந்தமானுலுங்

கிடையாதென்பது நிச்சயம். சந்தேகம்வேண்டாம். ஏனெனில் ஸ்ரீ சற் குருவினிடத்தில் பரமாத்ம விஸ்வாசமில்லாதவர்களுக்கு சராசரத்திலும் ஜீவகாருண்ணியமும் ஆத்மவிஸ்வாசமும் வராது. சராசரத்திலும் ஆத்மவிஸ் வாசமில்லாதவாளுக்குத் தன்னிடத்திலும் ஆத்மவிஸ்வாசமும் ஞானமும் வராது.

ஓ மனமே கேள்! மனதிற்குத்துக்கம் மனத்தானுண்டுபெண்ணுகிறது வேறில்லை. ஆத்மாவானது எதுவென்றால் தேகாதிப்பிரபஞ்சவஸ்துக்க ளான நாமரூபங்களொன்றும் ஆத்மாவல்ல. ஆத்மாவானது அரூபம். அதானது சச்சிதானந்தமாயும் ஏகமாயும் அத்துவிதமாயும் பரப்பிரம்மமா யும் நிர்ச்சலமாயும் பரிபூரணமாயும் சர்வப்பிராணிகளிடத்திலும் அந்தரி யாமியாயும் அரூபமாயும் நிர்முக்தனாயும் சத்தாமாத்திரமாயும் இன்னபடி யிருக்குமென்று ஒருவருக்கும் அறியக்கூடாததாயும் நிற்மலமாயும் நிறஞ் சனமாயும் நிற்குணமாயும் நிற்விகாரமாயும் சம்மயமாயும் சாந்தமாயும் ஜனனமரணாதி சுகதுக்கங்களில்லாததாயும் சர்வகாரணமாயும் சர்வவியா பகமாயும் சர்வாத்மாவாயும் சர்வக்ஞாயும் சர்வேஸ்வராயும் சர்வசாக்ஷி யாயும் சர்வாதாரமாயும் சர்வதேவதாமயனும் நிர்விகாராத்மாவாயும் தேஜோமயனும் நிர்விரதனும் நித்தியமாயுமுள்ளதாம். ஆத்மாவென் றறிக. இப்படிக்கொத்த பரமாத்மாவைக் குருப்பிரசாத சித்தமாயும் அருள்பிரகாசசுத்தமாயும் ஆத்மானாத்மவிவேகத்தினாலு மறியக்கூடியது மாமென்பது நின்சித்தத்தில் நிச்சயமாய் விஸ்வாசமடைந்தால் அவ்விடத் தில் பரமாத்மசைதன்யம் விளங்கிப்பூரணானந்தமடையலாம் சந்தேகம் வேண்டாம். ஏகாந்த குருபக்திகொண்டு சித்தம் நிராசையடையும். நிரா சையைத்தவிர பரமானந்தபதங்கிடையாதென்பது நிச்சயம்.

மனம். ஓ! ஆண்டவனே; ஏகாந்தகுருபக்தி அடையும்மார்க்கம் அருளவேண்டுமென றுகேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஏகாந்த குருபக்தி அடையும் மார்க்கமெது வென்றால் மனதினுடைய விபசாரத்தை நீக்கிப் பலவழியில் அலையா மல் ஒருவழியாக்கிக் குருவின் திருவடியில் நிறுத்திப் பாதுகாத்துப் பணிவிடைசெய்து பழகிவருவதானால் மனம் யேகமாம். மனம் யேகமா னால் சேர்வழிதெரியும். மனம் சேர்வழிபோனால் ஏகாந்தமாய்ப் பிரம் மரந்திரந்தாண்டி மேலான நிர்மலப்பிரம்ம ஐக்யமுந்தாண்டி அப்பாலுக்கப் பால் சிவதுரியமுங்கடந்து சிவானந்தமாய்ச் சிந்தையுமற்று சிற்பிரகாச மாயும் தற்பரமாயும் பரமானந்தமாயும் விளங்கும் ஜீவாத்மாவென்றறிக. ஜீவனே பரன். பரனே பரமாத்மா வேறேகிடையாது.

மனம். ஓ ஆண்டவனே! எல்லாம்விட்டு வைராக்கியத்துடன் சந்நியாசியாய் வந்தபின் மறுபடியும் சிலர் ஆசைவலையிற்சிக்கிக் கர்மக்கடலில் விழக்காரணமென்ன வென்றுகேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஞானிகள் அனேகவிதம். அதாவது அவாளவாளிட பூர்வவாஸனைக்குத்தகுந்தபடி பிராரத்துவம் அனேகவிதமானாலும் நான்கு சாதனங்களுமடைந்து ஆணவாதிமும்மலங்களுமற்று ஸ்ரீ சற்குருவின் திருவருள்பெற்று நிராசையாயிருக்க மகான்களிட உள்ளத்தில் அந்த நிராசை நிறைந்திருக்க ஒருசமயம் ஆசைவந்தடைந்தாலும் பிராரத்துவ வசத்தால் சம்சாரத்திலிருந்து போகமனுபவித்தாலும் அவாளுக்கதினால் யாதொரு பந்தமுங்கிடையாதென்பது நிச்சயம். அதாவது நிராசை பரிபூரணமாய் நிறைந்திருக்குமிடத்தில் அனேக ஆசைக்கூட்டங்கள் வந்தாலும் அதற்குள்ளே நுழைவதற்கிடமில்லை என்பது நிச்சயம். ஆசையானது நரகம். அதாவது இருள்போல் மூதேவியாம் என்றுமறிக. நிராசையானது சுவர்க்கத்திலும் மிகுந்த சுகமுடையதாயும் பிரகாசம்போல் ஸ்ரீதேவியாயும் இருக்கும். ஆதலால் ஆசையற்ற மஹான்களையடுத்தால் ஆசையற்று நிராசையடையலாம். ஆனாலும் ஆசையுடைய அபிமானிகளுக்கு அது வெட்கக்கேடாக இருக்கும். ஏனென்றால் ஆசாபாசபந்தத்திற்கும் நரகத்திற்குமேதுவான சம்சாரக்கூட்டங்களும் அதற்கடுத்த வர்ணாசிரமாதிகுலாச்சாரதர்மங்களும் விதிநிஷேதாதிகுணதோஷபேதங்களும் விட்டு அபேதமாய் நிர்வகங்காரியாய் அருட்பாலுண்ட மஹான்களையடுத்தால் சுஜனபந்துக்கள் சிநேகிதாள் மற்றும் உலகர்பலரும் பழிக்கும். பணக்காரன் சண்டாளனானாலும் சேவிக்கலாம். அதற்குக்குற்றமில்லை. ஆதலால் ஆசைக்கட்டறுப்பது அரிது. ஆசையையுடைய மாந்தர்கட்கு ஆதிமத்தியந்தம் துன்பம். நிராசையுடைய மஹான்கள் அதிகதுர்பலமானாலும் துராசையைவிட்டு ஆத்மாவிலன்பு வைத்துப் பக்திசெய்தால் ஆசையெல்லாம் நசித்து நிராசைவந்தடையும். இருதயத்தின்கண் நிராசைவந்து பரிபூரணானந்தமடைந்தால் அவ்விடத்தில் ஆசையானது அணுவளவானாலும் வந்தடையாதென்பது நிச்சயம். ஆதலால் ஆசையை மெள்ளமெள்ளப்பரமாத்மாவிலடக்கினால் ஆசையடங்கும். இதைத்தவிர ஆசையையடக்கும் மார்க்கம்வேறில்லை. ஆசையையடக்கி நிராசையாயிருந்த மஹான்களிடத்தில் ஆசைவந்தடுத்தாலும் நிராசைவந்ததைத்தடுக்கும் சந்தேகம் வேண்டாம். ஆகாசம்போல் பரிபூரணமாய் நிராசையாயிருந்தவிடத்தில் மேகம்போல் ஆசைவந்தடுத்தாலும் நிமிஷனேரங்கொண்டது நாசமாய்ப் போகுமென்பதற்குச் சந்தேகமுண்டா? ஆனாலும் ஆசையின் தொகையானதை எண்ணத்தொடங்கினால் அளவும்

தொகையுமில்லை. அதாவது ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம் இலக்ஷம், கோடி, கோடிக்கோடி, மஹாகோடி இந்தப்படி ஆசையினுடைய தொகையை எண்ணியெண்ணிச் சங்கம் வெள்ளமானாலும் எத்தனையோ கோடி கற்பமானாலும் எண்ணியெண்ணி எண்ணமானது தொகை அதிக மிருக்கிறது. ஆதலால் ஆசைப்படுகுழியில் வீழ்ந்த மந்த புத்தியுடையவர் கள் மேலேறுவது மஹாப்பிரயாசம். ஏற்றுவதற்கும் ஒருவரும் சகாயமு மில்லை. நிராசையுடைய மஹான்களுக்கு ஒருவருடைய சகாயமும் வேண்டியதில்லை. ஆனாலும் அவர்களுக்கு அனைவரும் சகாயமாயிருக்கும். ஆசையற்றருள்பெற்ற மஹான்கள் சம்சாரத்திலிருந்தாலும், சந்நியாசி யானாலும் பற்றற்றிருப்பார்கள் சந்தேகம் வேண்டாம்.

மனம். ஓ ஆண்டவனே! அனாத்மவஸ்துக்களோடுகூடி ஐக்யமா யிருந்தவர்கள் அதைவிட்டு பரமாத்மாவிலைக்யமடையும் உபாயம் எப்படி யென்று கேள்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அனாத்ம வஸ்துக்கள் அடியோடே நசித்தால் ஜீவாத்மாவானது பரமாத்மாவிலைக்யமாமென்பதற்குச் சந்தேகம் வேண் டாம். ஓ மனமே! சம்சாரகாரணமானது ஆசை. சம்சார நாசமாக்கு வது நிராசை. ஆத்மாவானது ஆகாசம்போல் எங்கும் பரிபூரணமாயும், ஸ்வயம்பிரகாசமாயும், அபேதமாயும், நித்திய நிர்மலமாயும், பற்றற்றதாயும் எதற்கும் இடங்கொடுக்கத்தகுந்ததாயும் ஆனந்தமாயுமுள்ளதாம். இது ஸ்ரீ சற்குரு பதமலராணை சத்தியம்.

மனம். ஓ ஆண்டவனே! உலகத்திற்கெல்லாம் கடவுள் ஒருவரா யிருக்க அநேகவித மூர்த்திபேதமாக ஏற்படுத்தக் காரணமென்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மனதிற்கு மூன்று குணமிருந்தமட்டும் நானாவித மாய்ப் பிதிர்தேவாதி, ராக்ஷதாள், நராள், சுராள், மாதாபிதா, குருதெய்வம், மனைவி, மக்கள், பந்து, சத்துரு, நான், நீ இந்தப்படியெல்லாம் குணபேதத் தால் அநேகவிதமான நாம ரூபங்களில் வேறுவேறாக எண்ணுவது குணத் தின் சுபாவீகம். குணம் மூன்றுமடங்கி மனம் பரிசுத்தமானால் குருவே மாதா, குருவே பிதா, குருவே குரு, குருவே தெய்வம், சராசரமுங் குரு சராசரத்திற்கும் குருவே தெய்வம்.

மனம். ஓ ஆண்டவனே! சரீராதிப் பிரபஞ்சவஸ்துக்களெல்லாம் ஈஸ்வரசிருஷ்டியாமென்று சிலரும், ஈஸ்வரசிருஷ்டியல்ல. மாயாசிருஷ்

டியாமென்று சிலரும் சொல்லுகின்றார்களே, இதுகளில் எதை நம்ப வேண்டுமென்று கேட்க அறிவுகூறியது.

ஓ மனமே கேள்! இதுகளிரண்டும் உண்மைதான். ஆனாலும் சர்வத்திற்குங் காரணமானது ஆத்மாவாதலால் சர்வமும் ஈஸ்வர சிருஷ்டி யென்று சொன்னதும் சரி, ஈஸ்வரன் அரூபியாதலால் ஈஸ்வர சிருஷ்டி யல்ல. மாயா குணத்தினுல் தோற்றமாமென்றதுஞ் சரி. ஆனாலும் மாயாகுணங்கள் ஈஸ்வர சிருஷ்டியாமென் றெண்ணுவோர்களுக்குக் கர்ம முந்தொலையா. ஜன்மமுஞ் சப்லமாகா. எல்லாம் மாயாகுண கற்பிதமா மென்றும் இதுகள் ஒன்றும் உண்மையல்லவென்றும் குருமுகமாயறிந்த வாளுக்கு இனி ஜன்மமுங் கிடையாதென்பது நிச்சயம். அதாவது தன் செயல் ஈசன்செயல் இந்தப்படியுள்ள இருபாவனையும் விட்டால் ஜீவன் முக்தியடையலாம். எல்லாம் ஈசன் செயலாமென்றெண்ணுவோர்கள் அதோகதி யடையுமென்றும், அதுவுமல்ல எல்லாம் தன் செயலென் றெண்ணுவோர்களும் அப்படியே யாகுமென்றும் வேதத்திற் கூறப்பட் டிருக்கிறது. அதாவது மூன்று குணத்தினுல் ஆரோபமாயும், சொர்ப்ப னம்போல் சத்தியமாயுந் தோற்றுவதாமிந்த உலகம். சொர்ப்பனம் வாஸ் தவமென்றெண்ணுவோர்கள் உலகமும் வாஸ்துவமென் றெண்ணுவார்கள். சொர்ப்பனம் வாஸ்துவமல்லவென்றால் உலகமும் பொய். ஆனாலும் மன முணர்ந்துப்பாராமல் மெய்யுணரா. மெய்யுணர்வதெப்படி யென்றால் சற்குருவையடுத்து தக்ஷணமூர்த்தியாகப் பாவித்தும், தியானித்தும், பூசித் தும், துதித்தும், பழகிவந்தால் மூன்றுவிதமான குணகர்ம வாசனைகளெல் லாம் அடியோடே நசிக்கும். மூன்றுவித குணகர்ம வாசனைகளும் நசித் தால் மனம் பரிசுத்தமாகும். மனம் பரிசுத்தமானுல் குரு கைகாட்டியதின் பொருள் விளங்கும். அதானது சின்முத்திரை சின்முத்திரையின் பொரு ளாவது ஆணவம், மாயை, கர்மம் இந்த மும்மலங்களும் பொய். பொய். சிவசத்தி இரண்டுமே மெய். மெய். என்றறிவித்ததாம். சின்முத்திரை யின் பொருளென்றறிக. ஆனுலுமிதின் பொருள் ஏகாந்த குருபக்தர் களுக்கேவிளங்கும். அதல்லாமல் கேவலம் பிராகிருத பந்தாளுக்கு விளங் காதென்பது தாற்பரியம். இந்தப்படி குருமுகமாயறிவதே மெய்யறி விளக்கமென்றும் உண்மை நிலையென்றுமறிக.

மனம். ஓ ஆண்டவனே! மும்மலங்களும் பொய்யானுல் உலக மேது? உலகம் வேறு, ஆத்மா வேருனுல் மனங் கவலையடைகிறதே என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! பரமாத்மாவினிடத்தில் கடலில் அலைபோலவும், நுரைபோலவும் தோற்றுவதாம் சமஸ்தப்பிரபஞ்சமும். ஆனாலும் கடலும் அலையும் அதிலுண்டான நுரையும் வேறு வேறாகத்தோற்றுவதுபோல ஆத்மாவும் ஆத்மாவுக்குள் தோற்றப்பட்ட சமஸ்தப்பிரபஞ்சமும் வேறு, வேறாகத் தோற்றுவது சுபாவீகம். அந்தப்படி ஒரு சமயம் வேறு வேறாகத் தோற்றினாலும் அது உண்மையல்ல. இது தன்னுடைய மாயையால் தோற்றுவதாமென்றறிந்து சர்வமுந் தன்னிடத்திலே கண்டு சர்வமுந் தானாயிருப்பவர்கள்தான் மகத்துக்கள். விடானுக்கு மாயை உள்ளதாயும், ஆத்மா சூன்யமாயுந்தோற்றும். நிர்விஷயமாய் ஆத்மப்பிரகாசமாயும் விளங்குகின்ற மஹான்களுக்கு மாயை சூன்யமாயிருக்கும். மாயை பொய்யாமென்றறிந்த மெஞ்ஞானிகளுக்கு நாமரூபாதி வஸ்துக்கள் சமஸ்தமும் பொய். அதாவது கர்மவாசனையும் மனதும் இந்திரியங்களு மிருந்தமட்டும் மாயை உள்ளதாயும் ஆத்மா வேறாயுந் தோற்றுவதல்லாமல் கர்மவாசனையும் மனதும் இந்திரியங்களும் அடங்கிவிட்ட மஹான்களுக்கு ஆத்மாவைத்தவிர வேறே இல்லையென்பது நிச்சயம். நிர்ச்சலமான சற்குரு பக்தர்களிதை நம்புவார்கள். அது கூடாமல் விபசாரபக்தியுடையவர்களுக்கு இரண்டாகத்தோற்றும். நிர்ச்சலமான பக்திவிஸ்வாசமுடையவாளுக்கு ஏகமாய் விளங்கும். நிர்ச்சலமான சற்குரு பக்திலக்ஷணம் ஒரு கற்புள்ள மங்கை தன் பதியினிடத்தில் பதிவிரதையாயிருந்தும், வேறொரு புருஷனைச் சேர்ந்தால் பதிவிரதையாகுமா? ஆகா. அவள் விபசாரியாமென்பதுபோல் ஒரு மஹானையடுத்து ஸ்ரீ சற்குருவாக நம்பி பாதுகாத்துப் பணிவிடை செய்துக்கொண்டிருந்து ஒரு சமயம் அதைவிட்டுப் புண்ணியத்திற்காகக் காசிக்குப்போனாலும் கர்மம் தொலையாதென்பது சத்தியம். ஸ்ரீ சற்குருவானவர் எல்லோருக்கும் பொது. அதானது சர்வப்பிராணிகளுக்கும் அந்தர்யாமியாயும், பரதேவதையாயும், பரிபூரணமாயுமுள்ள பிரணவமொன்றே யாம். இதுதான் மேற்கூறிய மணிநாதம் போல் விளங்குகின்ற பிரணவசொரூபமான சற்குரு. இதைத்தவிர சிஷன் வேறுண்டோவென்றால் இல்லை. ஆனாலும் மேற்கூறிய ஓங்கார நாதமான பரப்பிரம்மத்திற்குள்ளிருந்துத் தோற்றப்பட்ட ஓங்காரவிந்துவாம் பிரம்ம சக்தியென்றும் அந்தப் பிரம்ம சிற்சத்தியாம் சிஷனென்றுமறிக. இந்தப்படி குரு சிஷ்யர்களிருவருங்கூடி இரண்டறக்கலந்து ஐக்கியமாய் விளங்கி நின்ற இடத்தில் கோடிசூரியப்பிரகாசத்தோடு கூடியும், ஏகமாயும் அகண்ட பரிபூரணமாயும், பரமானந்தமாயுமுள்ள ஒரு அருட் சத்தி பிறந்தது. அந்த அருட் சத்திதான் ஜகத்குருவென்றுமறிக. இந்தப்படி நாதம், விந்து, அருள் இதுகள் மூன்றாகச் சொன்னாலும் அக்கினியும் சூடும்

பிரகாசமும்போல பரமாத்மா ஏகமாமென்றறிவதே கருத்து. அதாவதெப்படியென்றால் சூரியனும் சூடும் பிரகாசமும் ஏகமாமென்பதுபோல் மூலப் பிரணவ நாதமும் விந்துவும் அருளுமாகிய இம்மூன்றும் ஏகமாமென்றறிக. இந்தப்படி ஸ்ரீ சற்குருவின் திருவருளால் சற்குருவையறிந்து திருவடி இரண்டையும் இருதயத்தில் ஸ்திரமாய் நிறுத்தி ராகத்துவேஷாதி விர்த்திகளும் புண்ணிய பாபங்களுமாகிய இவ்விரண்டையும் பாதகாணிக்கையாக வைத்து நிர்ச்சலபக்தி விஸ்வாசத்துடன் அந்தச் சற்குருவின் திருவடி இரண்டையும் பாதுகாத்துப் பணிவிடைசெய்து ஐம்புலன்களையும் மனதையும் அடக்கி அகங்காரத்தைவிட்டு ஆவரணம் நீக்கி ஆத்மானுக்ம விவேகங்கொண்டு ஆத்மாவினாலாத்மாவினைப் பரமாத்மாவிலேலக்யம் செய்வதுதான் ஜீவன்முத்தி இதைத்தவிர உலகத்தின்கண் முத்தி அநேகவிதமிருந்தாலும் அதுகளெல்லாம் சரீரமுத்தியாமென்றும், சரீரமுத்திக்குப் புனர் ஜனனமரணாதி பெருந் துன்பக்கடலில் வீழுமென்றும் சுருதி, ஸ்மிருதி, வேத சாஸ்திர, புராண இதிகாசாதிகளுங் கூறி இருக்கிறதைக் குரு, சுருதி, யுக்தி அனுபவத்தினாலும், பக்திவிஸ்வாச சிரத்தையினாலும் இயமநியமாதி மற்றும் நான்கு சாதனங்களினாலும் ஸ்ரீ சற்குரு திருவருள் பிரகாசத்தினாலும், ஆத்மா நித்தியானந்த வஸ்துவாமென்றும், அது யேகமாமென்று மறிந்து சேவிப்பதுதான் குருபக்தி இதைத்தவிர அநேகவித பக்தி இருந்தாலும் அதுகளெல்லாம் பிராகிருத பக்தியாமென்றுமறிக.

ஓ மனமே கேள்! பரமபக்திவேறுயும் முக்திவேறுயுமெண்ண வேண்டாம் இரண்டும் யேகமாம். ஆதலால் ஏகாந்த குருபக்தி யொன்று கொண்டே ஜீவன் முக்தியடையக்கூடும். சந்தேகம் வேண்டாம்.

ஓ மனமே! நாம் இந்தப்படியெல்லாம் ஆத்மாவிலன்புவைத்து சதா நிஷ்டையிலிருந்து ஆத்மத்தியானஞ்செய்து ஆத்மாவினை ஆத்மாவிலேலக்யம் செய்தாலல்லவோ பிரம்மானந்தமாயிருக்கலாம். இந்தப்படியுள்ள ஏகாந்தமான நிர்ச்சல குருபக்திகொண்டு ஜீவன் முக்தி கைவசமான மஹான்கள் அதிக துர்லபம். ஏனென்றால் தாய்க்கு மகனிடத்தில் அதிகப்பிரியமிருந்தாலும் மகனுக்குப் பிராயம் வந்தகாலத்தில் தன் மனைவிமக்கள் பொருள் முதலான வஸ்துக்களில் அதிகப்பிரியமாயிருந்ததுபோல் ஆத்மாவிற்குச் ஜீவர்களிடத்தில் அதிகப்பிரியமிருந்தாலும் ஜீவர்களதை மறந்துவிட்டு நான் எனது யென்கிற அனாத்ம வஸ்துக்களில் அகமமதையும் பிரியமுங் கொண்டு தேகமே நித்தியம், போகமே மோக்ஷம் என்கிறதாக எண்ணி மாயா மோகாந்தகாரமான தாமச குணத்தையடைந்து குருடனைப்போல் மெய்வழித் தெரியாமல் மனச்சஞ்சலமடைந்து பலவிதமாயலைவதாதலால்

மேற்கூறியபடியுள்ள நிர்ச்சல பக்தியடைவது அரிது. ஆனாலும் அநேக அநேக ஜென்மஜென்மங்களில் நிஷ்காமமாகச் செய்து பழகிவந்த சற்கர்ம புண்ணியம் பூரணமானால் மகத்தெரிசனமடைந்து அந்த ஜென்மத்தில் கர்ம பந்தம்விட்டு ஜீவன் முக்தியடையக் கூடுமென்றறிக. நிஷ்காம சற்கர்ம புண்ணியம் பூரணமானால் நிராசையடையும்.

மனம் ஓ ஆண்டவனே! இத்தப்படியுள்ள நிர்ச்சலமான சற்குரு பக்தியும் விஸ்வாசமும் சாஸ்வதமான தர்மத்தையுமடையாமல் உலகத்தின்கண் அதிக ஜனங்கள் அநேகவித பேதமாயும் மூடர்களாய்க் கொடிய நரகத்திற்கேதுவான கொடிய பாபக்கடலில்விழக் காரணமென்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! திரிகுணமயமாமிந்த உலகம் அதாவது மூன்றுலகமாயும், மூன்று காலமாயும், முக்குண சகிதமான மூன்றவஸ்தையோடு கூடியும், நாலுயுகமாயும் பந்தமோக்ஷமிரண்டுக்குங் காரணமாயும், வெகுவித பேதமாயும், அடிக்கடி தோன்றியழிவதும் சுபாவீகம். ஆனாலும் அந்த நான்குயுகமும் நான்குயுகத்திலுமுள்ள மனிதர்களும் நான்குவிதமான குணகர்மபேதங்களோடு கூடியுமிருக்கிறது. அந்த நான்கு யுகத்தில் கடைசி. இதுமுடிவான கலியுகமானதால் எல்லோருக்குமிந்தப்பக்தியும் நிராசையும் வருவதசாத்தியமென்றறிக.

ஓ மனமே கேள்! அனாதியான சேர்க்கை வாசனையோடு கூடிய ஜீவர்களையெல்லாம் சிருஷ்டிகாலத்தில் அவாளவாளுடைய பூர்வகர்ம வாசனைக்குத் தகுந்தபடி மூன்றுவித குணங்களைக்கொண்டு நாலுயுகமாயும் நானுவிதமாயும் விதிவசால் சிருஷ்டிக்கப்பட்டது. குணம் மூன்றாவது சாத்வீகம், ராஜசம், தாமசம் யுகம் நான்காவது க்ரேதா, த்ரேதா, துவாபர கலி இதுகளில் சாத்வீக குணம் தனியாயிருந்தவாளுக்கிது க்ரேதாயுமாமென்றும், சாத்வீக குணமும் ராஜசமுங் கூடியிருந்தவாளுக்கிது த்ரேதாயுகமாமென்றும், ராஜசமும் தாமசமுங் கூடியிருந்தவாளுக்கிது துவாபர யுகமாமென்றும், தாமசகுணமே தனியாயிருந்தவாளுக்கிது கலியுகமாமென்றுமறிக. இந்தப்படி நான்கு யுகத்திலும் சதுர்வர்ணங்களும் கடவுளை உபாசித்துவந்தது. அதாவது சரியை, கிரியை, யோகம், ஞானம் அதைக் கருமவாசனைகொண்டு காலபேதத்தினால் நாளுக்குநாள் ஆத்மாவில் பக்திக் குறைவாய் வந்தது. ஆதலால் தாமசகுணம் மிகுதியதினாலிது கலியுகமென்று சுருதிமுதலானதுகளில் கூறப்பட்டிருக்கிறது. கலிதர்மமாவது விபரீதம். ஆதலால் கலியுகத்தில் மனுஷியர்களில் அதிக ஜனங்கள்

தாமசகுணத்தினுல் விபரீதமாய்ச் சரீரமே நித்தியம், போகமே மோக்ஷ மென்றெண்ணிக் கலியிலே பிறந்து, கலியிலே வளர்ந்து, அகர்மவிகர்மங் களைச் செய்தும் முடிவில் நரகமான வீட்டையடைவார்கள். ஆதலால் இந் தக்கலியுகத்தில் புண்ணியவான்கள் அதிதுர்லபம் பாபிகளானபேர்களோ அதிகம். பாபிகளின் நிலையாவது வேருகெட்ட மரம்போலே எவ் வளவு ஐஸ்வரியமிருந்தாலும் அதுகளெல்லாம் அரைநிமிஷங்கொண் டழிந்துபோகும் சந்தேகம் வேண்டாம்.

இதைக்கேட்ட மனம் ஓ சுவாமி ! சர்வஜனங்களும் வர்ணாச்சிரமத்தி லிருந்தும் முதற்படி சரியை, கிரியை, யோகமார்க்கத்தோடே முறைப்படி ஏறி நான்காம்பதவியான ஞானமடைந்து ஜீவன் முக்தியடைவதல்லாமல் வேறே சுளுவான மார்க்கமுண்டோவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! முதலில் வித்தில்லாமல் பலனுண்டாகுமா அது போல இந்த உலகமானது. சாத்வீகம், ராஜச, தாமச இம்மூன்று குணங் களைக்கொண்டு க்ரேதா, த்ரேதா, துவாபர, கலி இந்தப்படி நான்குயுகமாகப் பிரம்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்டது. அந்தப் பிரம்மாவின் சரீரத்தி லிருந்தும் சதுர்வர்ணமும் பிறந்தன. அதாவது முகத்திலிருந்து பிராம ணன், கையிலிருந்து க்ஷத்திரியன், துடையிலிருந்து வைசியன், பாதத்தி லிருந்து சூத்ரன் இவர்கள் நால்வரும் நான்குயுகத்திற்கும் அவகாசிகளும் அதிகாரிகளுமாமென்றறிக. அதாவது க்ரேதாயுகத்தில் பிராமணன், த்ரேதாயுகத்தில் க்ஷத்திரியன், துவாபரயுகத்தில் வைசியன், கலியுகத்தில் சூத்ரனும் அதிகாரிகளா மென்றறிக. இதுகளில் க்ரேதாயுகத்தில் தியானமும், த்ரேதாயுகத்தில் எக்ஞமும், துவாபரயுகத்தில் அர்ச்சனையும், கலியுகத்தில் கீர்த்தனமும், சந்யாசம், வானப்ரஸ்தம், க்ரகஸ்தாஸ்ரமம், பிரமசரியம் இந்தப்படி நான்காச்ரமங்களும் ஞானம், யோகம், கிரியா, சரியா இந்தப்படி நான்கு மோக்ஷஸாதனங்களும் சாயுச்யம், சாரூபம், சாமீபம், சாலோகம் இந்தப்படி நான்கு முக்திகளும் விதிக்கப்பட்டது. அதானதில் முக்காலத்தின் முடிவாயும், மூன்றுயுகத்தின் அந்தமாயுமுள்ள நான்காவதான கலியுகமாமிதுவென்றறிக. ஆகையால் இந்தக்கலியுகத்தில் பிராணிகளுக்கு வர்ணாசிரம முறைப்படி ஏறி நான்காம்பதமான முக்தி யடைவதற்கு மஹாப்பிரயாசம். ஏனென்றால் பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ரனென்கிற பேச்சிமாத்திரமல்லாமல் இவர்களுக்குடைத்தான பிரமசரியம், க்ரகஸ்தாஸ்ரமம், வானப்பிரஸ்தம், சந்நியாசமென்கிற நான் காஸ்ரமமும் அடியோடே நாசமாய்ப்போய்விட்டது. ஆதலால் கலிதர்ம

மெல்லாம் விபரீதமாயிருக்கிறது. வர்னத்துக்குத் தகுந்தபடியுள்ள ஆசாரமும், ஆஸ்ரமமும் எள்ளளவுங் கிடையாது. தர்மமெல்லாம் காட்டிற்குப் போய்விட்டது. சாத்வீகம் அடியோடே போயிற்று. எல்லாம் தாமச குணத்தினால் அந்தகாரமாயிருக்கிறது. மகத்துவமுள்ளதும் சண்டாளனிடமாய்விட்டது. இந்தக்கலி குடியிருப்பெவ்விடமென்றால் பொய் வார்த்தை பேசுவோரிடத்திலும், சூதாடுவோரிடத்திலும், மதுபானியிடத்திலும், குருத்ரோகி மித்ருத்ரோகிகளிடத்திலும், அதி காமியிடத்திலும், கொடுங் கோபியிடத்திலும், அரும் பாவியிடத்திலும், பிரபஞ்ச விஸ்வாசியிடத்திலும், விஸ்வாச வஞ்சக பாதகம் செய்வோரிடத்திலும் விபசாரியிடத்திலும், அதி லோபியிடத்திலும், பேராசையுடையவனிடத்திலும், கொலையாளியிடத்திலும், நீசனிடத்திலும், மண்ணிலும், பெண்ணிலும், கனகதன தான்யாதிகளிலும் இன்னும் மற்றும் அநீதியான இடங்களெல்லாம் கலி பதினாறுவயதுப்பிராயத்தோடுங் கூடிவாழ்ந்து குடியிருக்குமிடமாகுமென்றறிக. கலியுகத்தில் சதுர்வர்ணமும்,(வர்ணசங்ற)என்றும் பிரமாணமுண்டு அப்படியே அனுபவமும் பார்க்கலாம். அதாவது இந்தக்கலியுகத்தில் வைதீகமுமில்லை, தாந்ரீகமுமில்லை விஸ்ரகருமமுங் கிடையாது. கலிதாமசகுணமாதலால் எக்ஞம், தானம், தபஸ்,சக்ரியாசம்முதலானகர்மங்களுங்கூட ஒருவருக்குமதிகாரமில்லை. தாமசகுணசொரூபமாயிருந்த கலியுட சுபாவீகமாவதெது வென்றால் மஹா மோஹமான அந்தகாரம். அந்த மஹாமோஹமான அந்தகாரத்தினால்பேராசையும், கொடியகோபமும், அதனால்கொலைகளவு முதலான துஷ்கர்ம துர்மார்க்கர்களாயும், கொடிய பாபிகளாய் நாசமடையப்போகப்போகிற பேர்களுக்கு ஆத்மாவினிடத்தில் அப்பிரியமும், அனாத்மாவான சரீராதி வஸ்துக்களில் பிரியமுமாயிருக்கும். இந்தப்படியெல்லாம் கலிதர்மம் விபரீதமாதலால் இந்தக்கலியுகத்தில் வர்ணாசிரம தர்மங்கள் அணுவளவுங் கிடையாது. ஆகையால் வர்ணாஸ்ரமங்கொண்டு மோக்ஷமடைவது அசாத்தியம். ஆனாலும் வர்ணாஸ்ரமம்விட்டு அருள்பெற்ற மஹான்களையடுத்தால் மோக்ஷமடையலாமென்பது நிச்சயம். அதற்கு முதலாவது காமிய கர்மத்தைவிட்டு நிஷ்காமியாய் சற்கருமங்களை ஈஸ்வரார்ப்பணமாகச்செய்து மனம் பரிசுத்தமடைந்த மஹான்களிடத்தில் கலிவரா. அதாவது சூரியபகவான் சஞ்சரிக்குமிடத்தில் இருள்வந்தடையாதென்பதுபோல் ஞானிகளிடத்தில் கலி அணுவளவும் வந்தடையாது. சர்வசங்க பரித்யாகஞ்செய்து நிராசையாயிருந்த ஞானிகளிடத்தில் கலி சொரூபமான மோஹாந்தகாரம் அணுவளவும் வந்தணுகாதென்பது நிச்சயம். இன்னும் சாத்மீகமுடையவாளிடத்திலும், நல்ல சத்தியவான்களிடத்திலும் சாஸ்வதமான தர்மவானிடத்திலும், நிராசையாய்ப் பரிசுத்த

முடைய மனதிலும், நிஷ்காம கர்மிகளிடத்திலும், பகவத்குண நாமசங்கீர்த்தனங்களைச் சதாபடிப்பவர்களிடத்திலும், கலி வந்தடையாதென்பதும் சத்தியமே சத்தியம். இந்தப்படி ஆகாசத்தைப்போல பரிசுத்தமான யிடத்திலெங்கும் கலிவந்தடைவதற்கிடமில்லை. சூரியோதயகாலத்தில் அந்தகாரமான இருள் நாசமடைவதுபோல் யதார்த்தஞானிகளிடத்திலும் கலிவந்தடைந்தால் அந்தக்கலி நாசமடைவதற்குச் சந்தேகம் வேண்டாம். அந்தக்கலியானது இருள்போலெங்கும் பூரணமாயிருந்தாலும், சூரியன் சஞ்சரிக்குமிடத்தில் இருள் இராததுபோல் பூரணஞானிகள் சஞ்சரிக்குமிடத்திலும் கலி இராதென்பது நிச்சயம். அந்தக்கலியானது உற்பத்திஸ்தானமானயிடம் மூன்று. அதாவது மண்ணிலும், பெண்ணிலும், பொன்னிலுமாமென்றறிக. அதாவது கோரமாயும் மூடமாயுமிருக்கும். ஆகலால் மண்ணாசையும், பெண்ணாசையும், பொன்னாசையும்விட்டு நிராசையாயிருந்த மஹான்களிடத்தில் கலி அணுவளவும் இராதென்பது முன்கூறிய தாற்பரியம். கண்ணினாற் கண்டதும், காதினாற்கேட்டதும், மனதினால் நினைத்ததும் எல்லாம் பகவத் சொரூபமாயும் குருவாயும் பாவித்து உபாசிப்பவர்களிடத்திலும் கலி நாசமாம். எங்கும் வெயில் போலப் பரிபூரணமான பரமாத்மாவைத்தவிர அணுவளவும் வேறேஇல்லையென்று அறிந்த மஹான்களிடத்தில் இருள்போலுள்ள கலி அணுவளவும் வந்தணுகாது. கேவலம் கலி சூன்யமென்பது நிச்சயம். இந்தப்படி இன்பதுன்பங்களுக்குக் காரணம் மனமொன்றேயாம். அதாவது மனதும் ஞானேந்திரியங்களுங் கூடிக்கலந்திருந்து விடையத்தியானத்தோடு கூடி காமகர்மங்களைச் செய்யும் பாமராள் அடிக்கடி சம்சாரசாகரத்தினடுவிலே விழுந்து செத்தபின் அநேகமான கொடிய நரகமடைவார்கள். இதைத்தவிர ஞானேந்திரியங்களை அடைக்கி விடையத்தியானம்விட்டு நிஷ்காமியாய் மனங்கொண்டாத்மத்தியானஞ்செய்து கர்மஞ்செய்வதானால் அந்தக் கர்மேந்திரியங்களும் அடங்கி கர்மபந்தம்விட்டு மனம் ஆத்மாவைச்சேருமென்றறிக. அதாவது முன்கூறிய மூன்று குணங்களும், மூன்றவஸ்தையும், மூன்று காலமும், நான்கு யுகங்களும் சுருதி, ஸ்மிருதி, வேதசாஸ்திர புராண இதிகாசங்களெல்லாம் மனோலயபரியந்தம் சத்தியமாயுள்ளதாய்த் தோற்றும். மனம் லயமடைந்தால அது சத்தியமல்ல. சத்தியமாயும் நித்தியமாயுமுள்ள தெதுவென்றால் நிஷ்களபரிபூரணம் ஒன்றேயாம். வேறே அணுவளவுங் கிடையாது. மனோலயமாகும் பொருட்டு மார்க்கமாவதென்னவென்றால் வைராக்கியாதி சற்குணங்களினாலும், அப்பியாச யோகத்தினும், குருபக்தி விஸ்வாசத்தினாலும், நேதி, நேதி, மஹாவாக்கியப் பிரமாணத்தினாலும் அத்தியாரோப அபவாதத்தி

ஞலும், நிற்குணத்தியானயோகாப்பியாசத்தினுலும், வாக்கு, மனக்காயம், மூன்றும் ஸ்ரீ சற்குருவின் திருவடிக்கி அற்பணமாக்கிவிட்டாலது பரமாத்மாவிலடங்கும். அப்போது மனம் லயமாகுமென்றறிக. மனுே லயமானுல் வாக்கு மனக்காயமேது? வாக்கு மனக்காயமில்லாவிட்டால் உலகமேது? உலகமில்லாவிட்டால் பந்தமோக்ஷமாவதேது? ஆதலால் எல்லாம் பகவத்சொரூபமாக நினையாமலும், எல்லாம் பகவானிடத்தி லர்ப்பணஞ் செய்யாமலும், உபஜீவனம் செய்பவர்கள் சந்நியாசியானுலும், அவர்கள் பின்னபுத்திகளாமென்றும் அவர்களுடைய தபோவிரதாதி ஞான நிஷ்டைகளெல்லாம் (ஆம கும்பாம்புபோல்) நாசமாய் வந்துவிடும். ஆம கும்பம், பச்சை மண்குடம், அம்பு, ஜலம் அதாவது பச்சை மண்குடத் தில் தண்ணீர் நிறைத்துவைத்தால் அந்தக் குடமும் ஜலமும் இரண்டுங் கெட்டழிந்து நாசமாய்ப் போமென்பதுபோல் பேதபுத்திகளாயுள்ள சந்நியாசிகளிட தபோவிரதாதி நிஷ்டைகளும் எல்லாம் விரதாவாய் வந்து விடுமென்பது முன்கூறிய தாற்பரியம் ஆகலால் எல்லாம் பகவானிடத் திற் பார்த்து எல்லாம் பகவத்சொரூபமாகக்கண்டு எல்லாம் பகவானுக்கு அர்ப்பணமாக்கிச் செய்வதுதான் சாந்தகுண விர்த்தியென்றறிக. எல்லாம் பகவானுக்கற்பணமாகச் செய்யும் பரமபக்தர்களுக்கு இகத்திலுஞ் சுகம். பரத்திலுஞ் சுகம். பரமாத்மாவிலேக்யமாய்ப் பரமானந்தப் பிராப்தியா மென்பது சத்தியம். சம்சாரம் என்பதே சாகரம் அது மகாதுக்கமா மென்றறிக.

இதைக்கேட்ட மனம் ஓ சுவாமி! சம்சாரமாவது யாது அது தேகத் திற்கோ ஆத்மாவிற்கோ அதன் ரூபமென்ன? அந்தச் சம்சாரகர்த்தா யாரென்று அருளவேணுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சர்வப்பிராணிகளுக்குஞ் சம்சாரமானது சரீரம் அதாவது சம்சாரகர்த்தா ஜீவன் அவன்தான் புருஷன். அவனுக்குச் சம்சாரமானது மனதும் இந்திரியங்களுமாம். இந்தப்படி இந்திரியங்க ளும், ஜீவனும் பிரகிருதி புருஷனென்றுமறிக. ஆதலால் மனதும் இந்தி ரியங்களும் அடக்கமானுல் ஜீவனுடைய சம்சார பந்தமற்று ஜீவன் முக்த ஞமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம். ஆனுலும் முன்கூறிய இந்திரி யங்களையும் மனதையும் அடக்குவது மஹாப்பிரயாசம். அதாவது அந்நி யான சேர்க்கைவாசனையோடுகூடிய தூர்ச்சங்க, துர்விஷய வியாபாரத் தினுல் மனம் விபசாரசிலமாய்ச் சோரமாயிருப்பதல்லாமல் அதையடக்கி வசமாக்குவது மகாப்பிரயாசையாமென்றும் முன்கூறிய தாற்பரியம்.

ஆனாலும் மனம் பதிவிரதசுபாவமடைந்தால் அது ஜீவனுயிருந்த புருஷனி லடங்கியிருக்குமென்பது சத்தியம். விபசாரப்பட்டுக் கெட்டலையும் மனதைப் பதிவிரதையாக்கு முபாயம் எப்படியென்றால் சரியை, கிரியை, யோகம் ஞானமார்க்கத்திலே முறைப்படி உட்காரவைத்துப் பழக்கவேண்டும். அந்தப்படி சரியையிலிருந்தும் மனதினுடைய விபசாரம் அடக்கமானல் அந்தச் சரியைவிட்டு இரண்டாவது அதற்கு மேலான கிரியைப் படியிலேறித் தன் பதியுடன் சேர்ந்து பதிவிரதையாயிருக்கலாம். ஆனாலும் முன்கூறிய சரியையிலிருந்த மனம் கன்னிகையைப்போலவும், கிரியையிலிருந்த மனம் சுமங்கிலியைப்போலவும், யோகத்திலிருந்த மனம் கற்பணியைப்போலவும், ஞானத்திலிருந்த மனம் மெஞ்ஞானமென்கிற குழந்தையைப் பெற்றதைப்போலவும் நிரூபிக்கவேண்டும். இதில் முதலாவது சரியையிலிருந்த மனம் கன்னிகையைப்போலென்பதற்கு உதாரணம். ஒரு கன்னிகையானது பலபுருஷர்களிடத்திலும், விளையாடிக்கொண்டிருந்தாலும் அதற்குக் குற்றமில்லை. பக்குவகாலத்தில் தனக்கிதமான ஒரு புருஷனை மணந்து தன் பதியினிடம் சேர்ந்தபின் வேறொருமுகம் பாராமல் பதிவிரதையாயிருக்கவேண்டும். அதுபோல் முதலாவது மனம் சரியையிலிருந்தும், பல சாஸ்திரங்களையும், பல க்ஷேத்திரங்களையும், பல தீர்த்தங்கள், பலவிதமான சாதுக்களையும் சேவிக்கவேண்டும். இந்தப்படி மற்றும் அநேகமான சத்விருத்திகளையெல்லாம் ஆதரித்தாலும் அதனால் விபசாரக்குற்றமில்லை. அந்தப்படி பலநாள் சரியையிலிருந்தும் பழகி வருவதானல் மனதினுடைய தாமஸகுணமடியோடே நசிக்கும். தாமஸ குணம் நாசமடைந்தால் சற்குருவின் தெரிசனங்கிடைக்கும். சற்குருவின் தெரிசனங்கிடைத்தால் சர்வமும்விட்டு அந்தக் குருவின்திருவடி பூசை செய்வதுதான் எதார்த்தமானக் கிரியை. அந்தக் கிரியையிலிருந்தும் பதிவிரதையைப்போல் குரு சொன்ன சாஸ்திரம், குரு சொன்ன க்ஷேத்திரம், குரு சொன்ன தீர்த்தங்களெல்லாம் ஆதரித்துக் குருவிற்கற்பணமாக்கிக் குரங்குக்குட்டியைப்போல் விடாமற் பிடித்துக்கொண்டு குருவின் திருவடியைத் தியானித்துக்கொண்டு அதை மறவாமலிருப்பதுதான் மனதினுடைய பதிவிரதாதர்மமென்றும், கிரியையென்றுமறிக. இதனால் ராஜஸ குணமும் அடியோடே நசிக்கும். ராஜஸ தாமஸமிரண்டும் நாசமடைந்தால் மனதினுடைய விபசாரமடியோடே நசிக்கும். அப்போது மனம் நல்ல சுத்த சாத்வீகமாய் விளங்கும். மனம் சுத்த சாத்வீகமடைந்தால் ஸ்ரீசற்குருவின் திருவருள் கிடைக்கும். சற்குருவின் திருவருள்பெற்றால் யோகாப்பியாசஞ் செய்யலாம். யோகாப்பியாசஞ்செய்து பழகிவருவதானல் குணமூன்றுமடங்கும். குணமூன்றுமடங்கிவிட்டால் மனம் பரிசுத்த

மாய் லயமடையும். மனம் லயமடைந்தால் காலாம்பதமான ஞானம் கரதலாமலகம்போல் தானே கைவசமாகும் இதைத்தவிர ஒரு சாஸ்திரங் கையிலெடுத்துப் பார்த்து அதனுடைய உண்மை விளங்காமல் அதைக் கீழேபோட்டு வேறொரு சாஸ்திம் பின்னையொரு சாஸ்திரத்துக்குமேலான ஒரு சாஸ்திரம். இந்தப்படி அடிக்கடி பல ஞானநூல்களைப்பார்த்து சுல்ல சந்தணக்கட்டையைச் சுமந்த கழுதையைப்போலவதும் மனதினுடைய விவேகக்குறைவாம். அது விபசாரத்தொழிலாமென்றறிக. ஒரு குருவை யடுத்துச் சில நாள் பாதுகாத்தும் அதைவிட்டு வேறொரு குருவையடுத்து இந்தப்படி அடிக்கடி குருவைத் தேடுவதும் மனதினுடைய விபசாரமா மென்றறிக. அதாவது மனதையடக்குவதற்குத்தான் குருபக்தி வேண் டும். மனதையடக்குமுபாயம் அறிவதே சுருதி. மனதையடக்குமுபாய மிதுதானென்றும் நிச்சயப்படுவதே யுக்தி. மனமடக்கமானல் அதுவே யனுபவம். இதைத்தவிர காரியமே பெரிது, கர்மமே பெரிதென்றெண்ணு வோர்களுக்குக் குருபக்தி வராது. குருபக்தி இல்லாதவானுக்கு முக்தியும் வராது. காரியத்தையும், கர்மத்தையும் தூரத்தள்ளிவிட்டு காரண குருவை யடுத்து நம்புமானல் குருபக்திவரும். சந்தேகமில்லை. குருபக்தி வந்தால் அருள் கிடைக்கும். அருள் கிடைத்தால் பந்தமோக்ஷம் இரண்டிற்கும் காரணம் பரிசுத்தமான ஞானசிற்சக்தி யொன்றேயாமென்றுமறியலாம். அந்தப் பரிசுத்தமான ஞானசிற்சக்தியிலிருந்தும், அசுத்தமாயும், திரிகுண மயமாயுமுள்ள நாமரூபாதி சங்கற்பவிகற்பமாய்த் தோற்றுவதாம் பந்த மென்றும், நாமரூபாதி சங்கற்பவிகற்பங்களடியோடே யற்றது மோக்ஷ மென்றும் பெரியவாள் சம்மதம். அதாவது பரிசுத்தமான கண்ணாடிக்குள் கண்ட ரூபம் அசத்தியம். அதுபோல் பரிசுத்தமான ஞானசிற்சக்தியின் சிற்பிரகாசத்திற்குள்கண்ட நாமரூபங்கள் சமஸ்தமும் அசத்தியம். அதா வது சூரியக்ரஹணத்தினல் தோற்றப்பட்ட காணற்ஜலம்போல் சத்திய மல்லவென்றறிக. அங்ஙனம் எப்படியெனில் சூரியனில்லாவிட்டால் காணற்ஜலங் கிடையாது. ஆதலால் சூரியனும், காணற்ஜலமும் ஏகமா மென்றறிக. ஆனலும் காணற்ஜலம் அசத்தியம். கண்ணாடிக்குள்கண்ட முகம் தன்முகமாகுமா? தன்முகம் தன்னிடத்திலிருப்பது நிஜம். கண்ணாடியிற் கண்டரூபம் மாயை. அது பொய். ஆனலும் தன்முகம் தனக்குப் பார்க்கமுடியாதென்பது நிச்சயம். ஆகலால் தன்முகம் கண்ணாடி யிற் பார்த்தால் பார்க்கலாம். ஆனலும் அந்தக் கண்ணாடியிற் கண்டமுகம் தானல்ல. தன்னைத்தவிர வேறேயுண்டா? அந்தக் கண்ணாடிக்குள் இல்லையென்பது நிச்சயமாகுவதுபோல் சச்சிதானந்த விளக்கத்தின்கண் சிற்சாயையானது கண்ணாடி. அதிற்கண்ட ரூபம் மாயை. அந்த மாயா

ரூபமானது மனம். மனமானது ஆகாசம்போல் ஏகமாயும் பரிபூரணமாயு மிருக்கிறது. அந்த மனசங்கற்பமானது அநேகவிதமாயும், அநேக நாமரூபாதி சமஸ்தப்பிரபஞ்ச வஸ்துக்களுமாம். அது மாயை. இதுகளுக்கெல்லாம் காரணம் பரமாத்மஸ்வரூபமாமென்றும் பரமாத்மஸ்வரூபத்தைத்தவிர அணுவளவும் வேறில்லையென்கிற திடநிச்சயம் வரும். திடநிச்சயம் வந்தால் உன்னுடைய விகற்பங்களடியோடே நசிக்கும். சந்தேகமில்லை. மனதினுடைய சங்கற்பவிகற்பமற்றால் பந்தமோக்ஷமிரண்டும் எதார்த்தமல்ல. ஆனாலும் அசுத்தமான மாயையில் தூக்கமடைவது பந்தமாமென்றும், ஞானசிற்சக்தியாலுணர்வது மோக்ஷமாமென்றும் முன்கூறிய தாற்பரியம். இதுகளை ஏகமாய்ப்பார்த்தவாளுக்கு நாமரூபமில்லை. துவிதமாய்ப் பார்த்தவாளுக்கு அநேக நாமரூபமுண்டு. பொய்யறிவு அடங்கிவிட்டால் மெய்யறிவு வெளிப்பிரகாசமாகும். துரியநிலையடையுமானால் தூக்கமே துரியமாகும். வாக்குமனக்காயமற்றால் மாயையும் தானே நீங்கும். நிர்மலப்பிரமானந்த நித்தியமாம் பரமாத்மா ஒன்றே. சாக்ஷி காரணம் பூச்சியம். சர்வமுந்தானே. தானய்த் தத்வமசி வாக்கியார்த்தமாய் தாரகப்பிரம்மை வாகம், நீயே நானுமென்றும், நானே நீயாமென்றும் நீநானிரண்டுமில்லை. நிஷ்களமாமது நான்குமறைக்கும் அந்தமாய் நாத முடிவானபடியில் ஜோதிவடிவமாய்ப் பார்ப்பதே பரஞானம். பூரண விளக்கின் வொளியை சிற்பர வெளியாமென்றும், சிற்பர வெளிக்குளே குருவின் திருவடியைக் கண்டதே எதார்த்தஞானம். அதுதான் நானுமென்றும், நாதரூபமென்றுமறிக. ஏகமான கடலும், அலையும் நுரையும் போல் ஆத்மாவும், மாயையும், பிரபஞ்சமும், காரியகாரண கற்தத்துவ மூன்றும் ஏகமாய்ச் சமதெரிசனமானால் சிற்பர வெளிக்குளே சராசர ஜீவர்களும் எல்லாந்தானே தானப்ச் சகல சந்தேகங்களுந்தீரும். தற்பரமாம் சிவசக்தி இரண்டுமாயிரண்டறக் கலந்தது. அகண்டபரிபூரண வஸ்துவாம். பரமாத்மா ஒன்றுதான். ஆனாலும் பேராசையுடைய பாமரான் பரிசுத்தமடைவது மகாப்பிரயாசம். பரிசுத்தமடைந்தவாளுக்குப் பரமாத்வம் அணுவளவுங் கிடையாது. பரமகுருவினிடத்தில் வைத்த பக்தி விஸ்வாசங்கொண்டல்லாமல் மனம் பரிசுத்தமடையாதென்பது நிச்சயம். சொர்ப்பனத்திற்கண்ட சுகதுக்கங்கள் உணர்ந்து பார்க்குமளவில் அதுகள் அசத்தியமாமென்பதுபோல் மனமுணர்ந்து பார்க்குமளவில் உலகமெல்லாம் பொய்யாமென்றறியலாம். அதாவது இந்த வுலகமெல்லாம் மனமுணர்ந்து ஞானக்கண்ணினால் பார்த்தால் மாயாவி தன்னுடைய ஜாலவித்தையைப்போல் உள்ளதாய்த்தோற்றியதல்லாமல் எதார்த்தமல்ல ஆனாலும் மோக்ஷத்திலிச்சையுடையவாளுக்கு முன்கூறிய சரியை, கிரியை

யோகமார்க்கத்தோடே முறைப்படி ஏறிப்போனால் நாலாம்பதமான ஞான மடைந்து நித்தியானந்த கைவல்லியபதமடைவதற்குச் சந்தேகம் வேண் டாம். இந்த முறைப்படி வழிபார்த்து ஏறிப்போய் உபாசனைசெய்யாமல் உலகத்திலொருவருக்கும் முக்தியடையக்கூடியதல்ல. இதுவல்லாமல் ஞானசாஸ்திரங்களநேகம் பார்த்தாலும் வாயினாற்பேசி பலபேர்களுக்குங் கற்றுக்கொடுத்தாலும் ஜீவன்முக்தி இன்னபடியிருக்குமென்று பிரசங்கஞ் செய்தாலும் ஜீவன் முக்தியடைவதற்குவழி பாராமலும், குரு சேவை செய்யாமலும், வைராக்கியம், அப்பியாசமுதலான சாத்வீகவிர்த்திகளில்லா மலும், குதற்கம்பேசி காலக்ஷேபஞ் செய்பவர்களுக்கு ஞானத்தின் சுகந்தமானாலுங் கிடையாதென்பது நிச்சயம். ஞானசாதனம் நாலுமடைந்த வர்களுக்கு ஞானம் பக்தியிரண்டுந்தானே கைவசமாகும். ஞானம் பக்தி யிரண்டுங் கைவசமானால் ஜீவன் முக்தனாய் விவேகானந்த கைவல்யபத மடையலாமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம். முன்கூறிய சரியை முதல் கிரியை, யோகம், ஞானம் இதுகளில் எந்தப்படியிலிருந்தாலும் அந்தப்படியிலிருந்து சுகர்மம் பண்ணுவதானால் அந்தப்படியிலிருந்தும் மேலேறிப்போய் நாலாம்பதமான ஞானமடைந்து ஜீவன் முத்தியடைய லாம். இந்த முதல்படி முதலாவது ஏறாமல் நாலாம்பதமான மேற்படிக்கிக் கால்வைத்தால் தலைகீழாய் எல்லாவற்றிற்குங் கீழேவிழுந்து போகுமென் பதுபோல் தோன்றுவதாதலால் முதற்படியிலிருந்து முறைப்படியாய் கால் வைத்து மேல்மேலேறிப்போனால் தலைகீழாய் விழுமென்று பயப்பட வேண்டாம். ஆனாலும் ஞானம், பக்தி, கர்மம் இதுகள் மூன்றும் புரு ஷார்த்த சாதனமாமென்றும் இதுகள் அதிகாரம்போல் முறைப்படியுபா சனைசெய்து பழகி வருபவர்களுக்கு மோக்ஷமடையலாமென்றும், வேதா கம புராண இதிகாசாதிகளில் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் கர்மயோகத் தில் நிஷ்காமியாயிருந்தும் உபாசனாயோகத்தைச் சிரத்தாபக்தி விஸ்வாசத் துடன் உபாசனைசெய்து பழகிவருவதானால் ஞானயோகமடையலாம். ஆனாலும் முன்கூறிய ஞானம், பக்தி, கர்மம் மூன்று இதுகளில் கர்மத் திற்கு ஞானகாண்டம் வெகுதூரம். ஞானகாண்டத்திற்கு கர்மகாண்டம் வெகுதூரம், கர்மகாண்டத்திற்கும் ஞானகாண்டத்திற்கும் மத்தியிலிருப் பது உபாசனாகாண்டம். ஆதலால் போகத்திலுள்ள ஆசையும், காமகர்ம சங்கற்பமும்விட்டு பரிசுத்த நிஷ்காமியாயுபாசனா யோகத்திலிருந்தும், ஞானப்பியாசஞ் செய்து பழகிவருவதானால் ஆசையும், கர்மவாசனையும் அடியோடே நசிக்கும். ஆசையும், கர்மவாசனையும் அடியோடற்றால் அதுவே ஜீவன் முக்தியாமென்றும், சுருதிப்பிரமாணங்களிலும் பெரி யோர்களுங் கூறப்பட்டிருக்கிறது. இந்த வுலகத்தின்கண் பிராணிகளில்

பிரதானம் மனிதன். மனிதர்களின் க்ஷேமத்தின்பொருட்டு நிவர்த்தி, பிரவிர்த்தி, இரண்டுவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இதில் காமிகளுக்குப் பிரவிர்த்தியும் நிஷ்காமிகளுக்கு நிவர்த்தியும் அதிகாரமாயிருக்கிறது. அதாவது காமிகளுக்குக் கர்மகாண்டமும், நிஷ்காமிகளுக்கு யுபாசனை காண்டமும், அந்தக்கரண பரிசுத்தமுடைய ஆத்மயோகிகளுக்கு ஞான காண்டமும் அதிகாரமாகுமென்பதே முன்கூறிய தாற்பரியம். உபாசனை யோகியினுடைய இலக்ஷணமெப்படியென்றால் உபாசனை யோகங்களனேகமிருந்தாலும், ஒரு சற்குருவையடுத்து நம்பி சேவிப்பதும், உபாசிப்பதும், எல்லாவற்றிலுஞ் சிறந்த யோகம். அதனால் சொரூபஞானமடைந்து ஆத்ம ஞானத்தையுமடையலாம். ஆனாலும் சொரூபக்ஞானமும் ஆத்ம ஞானமுமிரண்டல்ல. சகள நிஷ்களமிரண்டுமொன்றுதான். ஆதலால் அந்த சகள நிஷ்களமிரண்டும், வெண்ணெயும், நெய்யும்போலவும், சூரியனும் பிரகாசம்போலவும், எள்ளும் எண்ணெயும்போலவும், பூமியும் கெந்தமும் போலவும், ஜலமும் இரசமும்போலவும், அக்கினியும் சூடும்போலவும், வாய்வும் ஸ்பரிசம்போலவும், ஆகாசமும் சத்தமும்போலவும், சகள நிஷ்களமிரண்டும் ஏகமாமென்றறிக. அதாவது நிஷ்களமான பரப்பிரம்மமும் சகலமான சராசரமான மாயாப்பிரபஞ்ச வஸ்துக்களுமிரண்டல்ல. அதுகளிரண்டும் ஏகமாமென்றுமறிக. அதாவது பரிசுத்த நிர்மலமாயும், நித்திய நிஷ்கள, நிற்குணமாயு முள்ள பரப்பிரம்மத்தில் சகளந்தோன்றியது. எப்படியென்றால் உருக்கினநெய்க் கட்டியாவதுபோலவும், பனித்தண்ணீர் கட்டியாவதுபோலவும், மழைத்தண்ணீரானது அலிபக்குவமாவதுபோலவும், ஸ்தூலமாய், சாக்ரமாய், பிர்மாண்டரூபமாய், அநேகரூர்த்திபேதமாய் சகுணமாய், நிற்குணமாய், நிர்ணயித்தறியக்கூடாதாயும், திரிகுணமாயும்' திருமூர்த்திகளாயும், இந்திராதி தேவர்களாய், மனுஷிய திரியர்க்காதி நானரூபமாய்த் தோற்றுவதெல்லாம் ஏகமாயும், மாயாரூபமாயும், விளங்கும் பரமாத்மா வொன்றேயாமென்றுமறிக. அதாவது தீயும் புகையும்போல் பரமாத்மாவிலிருந்துத் தோற்றப்பட்ட சர்வாத்மப் பிரபஞ்சமும் சர்வசாக்ஷியும் ஏகம் அதுதான் வேறில்லை. எல்லாந் தானொருவன். ஆனாலும் தனக்கு நாமமனேகவிதஞ் சொல்லுவார்கள். பிரகிருதிகுணம் முதல் நானாவாயும், நானாவர்ணமாயும், சுருதி, ஸ்மிருதி, வேதசாஸ்திர புராண இதிகாசாதிகளாயுந் தோற்றுவதெல்லாம் சப்தப்பிரமாணமல்லாமல் வேறே அணுவளவுங் கிடையாதென்பது நிச்சயம் ஆதலால் ஆத்மாவும் பிரபஞ்சாதி நாமரூபங்களெல்லாம் யேகமாமென்றும், தன்னைத்தவிர வேறே நாமரூபமில்லையென்றுமறிக. நானாவிதமாய்த் தோற்றுவதற்குக் காரணம் சப்த பிரமாணங்களால் தோற்றுவதாம். அதுவும் இந்திரிய

சோஜனமல்லாமல் எதார்த்தமானது யேகமாய் விளங்கும் ஞானமாமென்றறிக. பிரபஞ்ச நாமரூபங்களையெல்லாம் ஆத்மாவைத்தவிர வேறொரு சொரூபமாக்கி நானுவிதமாயறிவது அஞ்ஞானமாம். எல்லாத்தானும் யேகமாய்த் தனக்கன்னியமில்லால் கண்டதுதான். பிரமக்ஞானமென்றறிக. பிரமக்ஞானமாவது இரண்டுவிதம். அதாவது பரோக்ஷம், அபரோக்ஷம் இதில் முதலாவது பரோக்ஷமாவது ஸ்ரீ சற்குருவின் திருவருளால் அறிவதாம். அதாவது சகுணத்திற்குள் நிற்குணமும், நிற்குணத்திற்குள் சகுணமும், யேகமாய் சமரசமாய்க்கண்டது. பரோக்ஷக்ஞானமாம். சகுணமாய்க் காணப்பட்ட சமஸ்தப்பிரபஞ்சவஸ்துக்களும், ஆகாசத்தில் சித்திரம்போல் பார்த்து அந்தக்கரண உபாதியற்று சச்சிதானந்த பரிபூரணமாயும், நிர்ச்சல, நிஷ்களா, ஸ்வயம்பரமஜோதியாயும், நிராமய, நிற்குண நிரஞ்சனமாயும் அறிவதாம் அபரோக்ஷக்ஞானமென்றறிக. இதுகளில் முதலாவது பரோக்ஷக்ஞானம், பரிபூரணமானல் சொரூபானந்த ஜீவன் முத்தியாமென்றும், அபரோக்ஷக்ஞானம் பரிபூரணமானல் விவேகானந்த நித்திய கைவல்யபதமடையலாமென்றுக் தாற்பரியம். ஆதலால் முதலாவது பரோக்ஷக்ஞான மடையாமல் அபரோக்ஷக்ஞான மடையாதென்பது நிச்சயம். அதாவது எள்ளிக்குள்ளிருந்த எண்ணெயெடுப்பதுபோல் பரோக்ஷத்திலிருந்தும் அபரோக்ஷமடையவேண்டும். எள்ளில்லாமற் போனல் எண்ணெயேது ? அதுபோல் பரோக்ஷமடையாதவர்களுக்கு அபரோக்ஷமுங் கிடையாதென்பது முன்கூறிய தாற்பரியம். ஆதலால் முதலாவது அபரோக்ஷமடையும்பொருட்டு சிரத்தையுள்ளவாள் பரோக்ஷத்திலிருந்தும்அபரோக்ஷவுபாசனைசெய்துசொரூபானந்த மடையாமலும் தத்துவங்களையெல்லாம் எண்ணியெண்ணிப் படித்து இதுகளெல்லாம் முத்தையென்றெண்ணுவோர்கள் இரண்டுங்கெட்டு அதோகதியடையுமென்பது உபநிஷத்துக்களும் மஹத்துக்களுங் கூறியது சத்தியமாமென்றறிக. தத்துவங்களை அடக்குவதே யுக்தி. ஆனலும் சகளநிஷ்களமாயுள்ள பரோக்ஷ, அபரோக்ஷமிரண்டும் மனதிற்கு அல்லாமல் பரமாத்மாவினிடத்தி லிதுகளிரண்டுங் கிடையாதென்பது சத்தியம். மனமானது ஆத்மானுத்மா யிரண்டிற்கும் மத்தியஸ்தானமாயிருந்தும் பரிசுத்தமான சத்தியை யுபாசனைசெய்து சத்பாவனைகொண்டு அசத்பாவனையைத் தள்ளி அசத்தும், சதசத்துவம், சத்துவமில்லாமல் அளவற்ற ஆனந்தமாயிருக்கலாமென்பதே முன்கூறிய தாற்பரியம். ஆத்மானுபம் வந்துவிட்டால் ஆனந்த ரூபிணியாயிருந்த வித்தியா, சத்தியும், ஆத்மாவும் ஒன்ருய் இரண்டறக்கலந்திருக்கும். ஆத்மாவிலிருந்து வுண்டான ஆனந்தமும், ஆத்மாவும் வேறுவேறல்ல. ஆத்மாவின் சுபாவமே ஆனந்தம். ஆனந்தத்தை

யறிவதே ஆத்மா. ஆத்மாவையறிவது ஆனந்தம். இந்தப்படி அனுபவம் வந்தவர்களுக்கு ஆத்மாவும், அறிவும், ஆனந்தமும் ஒன்றாகவேயிருக்கும். ஆனாலும் அனாத்மாவோடு சேர்ந்து விஷயபோகங்களை யனுபவிப்பதும், சுகதுக்கங்களை யூட்டுவதும் இதைத்தவிர மோக்ஷத்திலிச்சைகொண்டு வைராக்கியமுடையவர்களுக்கு ஆத்மாவோடு சேர்ந்து பிரம்மானந்தத்தை யூட்டுவதும் இந்த ஒரே சத்தியாமென்றறிக. ஆதலால் நித்திய பந்தத்திற்கும், நித்திய முக்திக்கும் காரணம். ஞான சிற்சக்தி ஒன்றேயாம். அதானது வித்தையென்றும், அவித்தையென்று இரண்டு நாமமும் ஒரே சத்தியாம். இந்தச் சத்தியையுபாசிக்காமல் போகம், மோக்ஷமிரண்டுங் கிடையாது. இந்தச் சத்தி அனாத்மாவோடு சேராமற்போனால் விஷய போகங்களும் சேஷ்டிப்புமில்லை. ஆத்மாவோடு சேராமல் மோக்ஷமும் ஆனந்தமுமில்லை. ஆதலால் பந்த மோக்ஷ மிரண்டையும் ஊட்டுவதற்கு வித்தையும் அவித்தையுமாய் இருந்தது. இந்த மூலசிற்சத்தி ஒன்றேயாம். இரண்டல்ல. அபிமானிகளுக்கு இரண்டாய்த் தோற்றுவது அஞ்ஞான காரணம். ஞானம் அஞ்ஞானம் இதுகளின் இரண்டிற்கும் காரணமாயும் பிரதானமாயும் இருந்தது மனம் ஒன்றேயாம். அதாவது விஷயங்களைச் சிந்திக்கும்போது அந்தமனம் அந்த விஷயங்களில் சேர்ந்திருக்கும். அது போல் ஆத்மாவைச் சிந்திக்கும்போது அந்தமனம் ஆத்மாவைச் சேர்ந்திருக்கும். ஆதலால் மாயாவிமோசனமானால் மனமேது. மனம் அடங்கிவிட்டால் அதுவே பரமாத்மா. மனம் பரமாத்மாவாகும்போது மனம் என்பதும் அவித்தை என்பதும் இல்லை. குருவென்பதும் சிஷ்யனென்பதும் இல்லை. இதுகளெல்லாம் குருவருள் மஹாவாக்கியம்பெற்று மனோலயப் பரியந்தம் இருக்குமென்பதே முன்கூறிய தாற்பரியம். மனோலயமாகும் பொருட்டு மார்க்கம் எதுவென்றால் மனமானது சத்தியத்திலும் புத்தியானது தர்மத்திலும் சித்தமானது குருபக்தி விஸ்வாசத்திலும் அகங்காரமானது ஆத்மாவிலும் உபாசித்துப்பழகி வருவதானால் அந்தக்கரணம் நான்கும் பரிசுத்தமாய் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும். ஆனாலும் ஏகாந்த பக்தி அடைவதற்கு முன் இளம்பக்தியாய் இருந்தபோது ஒரு அபிஷ்டமான மூர்த்தியை உபாசிக்கவேண்டியது அவசியந்தான். அந்த மூர்த்தியாவது கணபதி, விஷ்ணு, சிவன், மாயை, சூரியன் ஆக ஐந்து. இதைத் தவிர இன்னும் அனேக மூர்த்தி பேதங்கள் இருந்தாலும் அதுகளெல்லாம் இந்த பஞ்ச மூர்த்திகளினுடைய அம்சங்களாகவே இருக்கும். இந்தப் பஞ்ச மூர்த்திகளில் ஒரு மூர்த்தியானாலும் அவாளவாளுக்கு இஷ்டமான மூர்த்தியைப் பக்தி முற்றும் காலபரியந்தம் உபாசிக்கவேண்டியது. இந்தப்படி சேவித்துக்கொண்டிருந்தால் சற்குணமும் குருபக்தியும் உண்டாகும். குரு

கடாக்ஷத்தினுல் ஆத்மாவை அறியும்போது இந்த ஐந்து மூர்த்திகளும் தத்துவங்களாய் இருக்கும். இந்தப்படி அறிவது உத்தமம். அதாவது உத்தமம் தத்துவபோதம், மத்திமம் வேதபாடம், அதமம் சாஸ்திரபாடம், தீர்த்தாடனம் மனேபிராக்தியுமா மென்றும் பெரியவாளுடைய சம்மதம். குருமுகமாய் அறிவதே எதார்ததக்ஞானம். ஆதலால் குருமுகமே முகம். அதுவே முடி. குருபதமே பதம். அதுதான் அடி. இதுவே ஆண்டவருடைய அடிமுடி. இந்தப்படி அடிமுடியை அயனும் மாலும் தேடிக் காணுத வஸ்துவாம் என்றும் அதாது சூக்ஷ்மத்தில் ஆதியந்தம் இல்லாத அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய் விளங்கும் சிவபிரானுக்கு அடிமுடி இல்லை என்பதே நிச்சயம். இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்துக்குத்தான் அடிமுடி உண்டென்பது. இந்த ஸ்தூலப் பிரபஞ்சமானது பிர்ம்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்டது.

இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்துக்கும் இதுகளை எல்லாம் சிருஷ்டிக்கப்பட்ட பிர்ம்மாவிற்கும் காரணம் சூக்ஷ்மமான பரமாத்மா ஒன்றேயாம் என்றறிக. அனேகமான சுருதி ஸ்மிருதி வேதாகமபுராண இதிகாசங்கள் இதுகளையும் இந்தப் பிரபஞ்சம் எல்லாவற்றையும் உண்டுபண்ணி வைத்த பிர்ம்மாவிற்கு, நானே சிருஷ்டிகர்த்தா, நானே எல்லாவற்றையும் உண்டு பண்ணினவன் என்கிற ராஜஸசாபிமான கர்வத்தினுல் கோரபாவனைக் கொண்டு சூக்ஷ்ம ரூபியாயிருந்த ஸ்ரீ பரமேஸ்வரனுடைய திருமுடியைத் தேடிக்காணுமல் கண்டதாக லோகரக்ஷகராகிய ஸ்ரீமன் நாராயணருடைய திருமுக முன்பாக நான்போய் சிவன் திருமுடியைப் பார்த்துக்கொண்டு வந்தேன் என்பதாகப் பொய்வார்த்தைச் சொல்லியதாதலால் அந்தத் தலையை பரமசிவன் அறுத்தாரென்றும் புராணங்களில் கூறியிருப்பது எதார்த்தம் என்பது சத்தியம். அதுபோல் குருவித்தையும் ஞானுனுபவமும் வராமலும், அகங்காரத்தை விடாமலும், அனேக ஞானநூல்களைப் பார்த்தும் அனுபவிகளைப்போல நான் பிர்ம்மத்தைக்கண்டேன் என்கிற பொய்வார்த்தைச்சொல்லித் திரிபவர்களுக்கு என்னகதி வரப்போகிறதோ தெரியாது. எல்லாம் பகவானுகக்கண்டு சேவிப்பவனுக்குத் தன் சொரூபம் விளங்கும். தன் சொரூபம் அறிந்தால் அது சுயம்பிரகாசம் என்றறிக. சொரூபமாவது தானும் குருவும், ஈரேழுபதினுன்கு உலகமும், அதற்குள் அடங்கி இருந்த சராசரஜீவர்களும், பரமாத்மாவும் ஏகமாய்க் கண்டதுதான் தத்சொரூபம் என்றெறிக. இந்தப்படி ஏகசொரூபானந்தத்திலிருந்தும் அறிவதே ஆத்மக்ஞானம். ஆத்மக்ஞானத்தினுல் பிரம்மானந்த பதமடையலாம். எல்லாவற்றிலும் சிறந்தது பிரம்மானந்தம். இதைத் தவிர விடையானக்

தம் முதல் பதினோரானந்தமும் மனோவானந்தமாம். அதுகள் மித்தையாம் என்றறிக. இந்தப் பதினோரானந்தத்திற்கும் மேலானது ஆத்மானந்தம். அதானது பிர்ம்மானந்தம். பிர்ம்மானந்தமே நித்தியானந்தமாம் என்றறிக. ஆனாலும் இந்தப்படி நித்தியமான சுகத்தைமறந்து அனித்தியமான சுகம் நித்தியம் என்று எண்ணுவதும் மனோபாவனையாம். விடையத்தியானங் கொண்டு சம்சாரத்தை உண்டு பண்ணுவதும் மனோபாவனையாம். ஆத்ம பாவனைக்கொண்டு சம்சார சாகரத்தைத்தாண்டி மோக்ஷமடைவதும் மனோ பாவனையாம். இந்த உலகமானதும் மனோபாவனையாம். இந்த உலகத்தின் கண் காணப்படும் சராசரஜீவர்களும் மனோபாவனையாம். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபாவம், அனுக்ரஹம் இந்த ஐந்துத்தொழில்களும் மனோ பாவனையாம். பாவனைக்கதீதமானதே பரமாத்மா. பாவனையற்றால் மனம் பரிசுத்தமாய் ஆத்மசுகமடையலாம் என்றறிக.

மனம். ஓ சுவாமி! மனோபாவனைவிடுவது எப்படி என்று கேட்க. அறிவு கூறியது.

ஓ மனமே கேள். பிறந்தபோதே பாம்பின்வாய்த் தேரையைப்போல் எமனுக்கு இரையாகப்போகிற இந்தச் சரீரம் இன்றைக்கோ நாளைக்கோ அழிந்து விடுமென்கிற நிச்சயம் வந்தால் போகத்தில் வைராக்கியம் வரும். அதாவது ஒருவனையொருவன் கொலைசெய்தால் அந்தக்கொலை குற்ற வாளியை நாளையதினம் தூக்கிலிடும்படி மஹாராஜா விதிக்கப்பட்டது. அதைக்கேட்ட அந்தக் குற்றவாளியின் சிந்தனை எவ்விதமிருக்குமென்றால் நாளையத்தினம் இந்தச்சரீரம் நாசமாய்ப்போகுமென்பது நிச்சயம். இந்தப் படி நினைந்து பயந்தவனுக்கு, அநேகமான போகவஸ்துக்களைக் கொடுத் தாலும் அவனுக்கு அந்த மரணபீதியைத் தவிர போகத்திலாசை வருமா? வராது. அதுவுமல்லாமல் அந்த மரணபீதியை விட்டு வேறு சிந்தனை வருமா? வராதென்பது நிச்சயம். அதுபோல் இந்தச் சரீரமும் இப்பவோ இன்னொரு சமையமோ இன்றைக்கோ நாளைக்கோ அழிந்துபோகுமென் கிற நிச்சயமடைந்தால் ஆசையும் மோகமும் தானே நசிக்கும். ஆசையும் மோகமு மற்றால் மனோபாவனையுங் கிடையாது. மனோபாவனை யற்றால் ஞானம் வரும். ஞானம் வந்தால் அந்த ஞானக்கினியால் சர்வபாவமும் அடியோடேதகித்துப் போகும். சரீரமும் நசிக்கும். பிர்ம்மானந்தமா யிருக்கலா மென்றறிக.

மனம். ஓ சுவாமி, எல்லாவற்றிலும் சிறந்தது. ஆத்மக் ஞானமா மென்றும் அதற்கு முக்கிய சாதனமானது சாதுக்களின் பாத பூசையும்

பரம குருவினிடத்திலுள்ள பக்தி விஸ்வாசமாமென்றுந் தெரிந்துகொண்டேன். ஆனாலுமது இந்த உலகத்தின்கண் மனுஷரில் கோடியில் ஒருவரிருந்தாலு மிருக்கும் இதைத்தவிர அனைவரும் சாதுக்களில் பக்தி இல்லாமல், வரக் காரண மென்னவென்று கேட்க, அறிவு கூறியது.!

ஓ மனமே கேள்! இந்த உலகத்தின்கண் சர்வப்பிராணிகளும் மூன்று வித குணத்தோடு கூடிப்பிறந்தது. அதானது அவாளவாளுடைய பூர்வ கர்ம வாசனைக்குத் தகுந்தபடி அநேகனேகவித குண பேதகங்களோடு கூடி இருப்பதாதலால் எல்லோருக்கும் முன் கூறினபடி சாதுக்களில் பிரியமும் பக்தியும் வராது. அதானது அவாளவாளுடைய குணத்தைப் போலுள்ள, இரத்தாரைக்கண்டால் சந்தோஷமாய் வெகுமானித்து மரியாதைசெய்வார்கள். அங்ஙனம் எப்படியெனில் சாத்வீகமுடையவாளைப் பார்த்தால் சாத்வீகமுடையவாளுக்குப் பிரியம். அதுபோல் ராஜசகுண முடையவாளில், ராஜசகுணமுடையவாளுக்குப் பிரியம். தாமசகுண முடையவாளில் தாமசகுணமுடையவாளுக்குப் பி ரியம். பிராம்மணஜாதி களுக்குப் பிராமணக்கூட்டம் பிரியம். ராஜாவுக்கு ராஜாக்களில் பிரியம், சண்டாளர்களுக்குச் சண்டாளர்களில் பிரியம், ஆட்டிற்கு ஆட்டிலும், மாட்டிற்கு மாட்டிலும், பொய்யனுக்குப் பொய்யனும், மெய்யருக்குமெய் யரும், திருடனுக்குத் திருடனும். சத்தியவானுக்குச் சத்தியவானும், விபசாரிக்கு விபசாரியும், பதிவிரதைக்குப்பதிவிரதையும், விளையாடுங்குழந்தை களுக்கு விளையாட்டுக்குழந்தைகளிலும், சூதாடுவோர்களுக்குச் சூதாடிகளிலும், இந்தப்படி யெந்தெந்த ஜெந்துக்களுக்கும் அந்தந்த இரத்தாரைப் பார்த்தால் கூட்டுறவாய் சந்தோஷமாயிருக்கும். அதுபோல் சாந்தகுண முடைய சத்தியவான்மார்களுக்கு மாத்திரம் சாந்தகுணமுடைய சத்குரு வினிடத்தில் பக்தி விஸ்வாசம் வரும், சந்தேகம் வேண்டாம்.

அதாவது அநேகனேக ஜன்மங்களிற் செய்து பழகி வந்த புண்ணிய விசேஷத்தினலென்றுமறிக. அதாவது ஒரு ஜன்மத்தில் ஒருநாள் ஒரு சமயம் மஹத்தெரிசனமடைந்தவாளுக்கு, மறு ஜன்மத்தில் பத்துநாள் சாதுக்கள் தெரிசனங்கிடைக்கும். அதற்கடுத்த ஜன்மத்தில் நூறு ஆயிரம், பதினயிரம், இலக்ஷம், கோடி, இந்தப்படி அநேக ஜன்மமடிக்கடி யானல் ஒரு ஜன்மத்தில் அளவிறந்த புண்ணியங்கூடும்.

புண்ணியம் பூரணமானல் புருஷார்த்தமடையலாம் சந்தேகம் வேண்டாம். ஆதலால் சாதுக்களின் தெரிசனத்தாலடைந்த புண்ணியமெல்லாம் புண்ணியத்திலும் புண்ணியமா மென்றறிக. இதைத்தவிர செய்யும் புண்

ணியமெல்லாம் ஆவது மழிவதுமாய்த்தீரும். சத்தான புண்ணியம் பூரண மானல் அதுதான் சாந்தகுணத்தின் சொரூபமென்றறிக.

இதைக்கேட்ட மனம். ஓ சுவாமி இவ்வுலகத்தின்கண் மனுஷரிலும் மனுஷருண்டு, அதிலும் நாய், கழுதை, பன்றி முதலான மிருகஜாதிகள் போல் அநேக மனுஷருமுண்டு. இவர்களிலும் சாந்தமாய் சாத்வீககுண முடையவர்களாம். மனுஷரிலும் மகிமையுடைய மனுஷரென்றும், புருஷ சிரேஷ்டன் மார்களென்றும் சாதுக்களென்று மறிந்தேன். இவரை அடுத்தால் எதார்த்தக் ஞானமடைந்து, மோக்ஷமடையலாமென்பது நிச்சய மானேன். ஆனலும் அந்த சாத்வீக பக்தியின் சொரூபமாவதெது? அதை யடையும் பொருட்டு அப்பியாசமாவதெது வென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள். அவ்வியக்தமான மூலப் பிரகிருதியிலிருந்தும் விகுற்திகளாய் மூன்று குணங்கள் தோற்றியது. இதுகளில் சாத்வீகத்தின் சொரூபமாவது, ஏகமாயும் நிற்மலமாயுமுள்ளதா மென்றறிக. ஆனலும் அதுவும் மூன்றுவித குணமாயிருக்கும். அதாவது சாத்வீகத்திற் தாமசமும், சாத்வீகத்திற் ராஜசமும், சாத்வீகத்திற் சாத்வீகமுமா மென்று மறிக. இதுகளில் சாத்வீகத்திற் தாமசமும், சாத்வீகத்திற் ராஜசமும் விட்டு, சாத்வீகத்திற் சாத்வீகமடைவதாம் சாந்தகுணவிர்த்தி யென்று மறிக. ஆனலும் மேற்கூறிய, சாத்வீகத்தில் தாமசகுண விர்த்தியானது எதுவென்ருல், நிஷ்காமியாய் பலபல புண்ணிய தீர்த்தங்களாடனவும், பல பல புண்ணியக்ஷேத்திர வந்தனமும் பலவிதமான சாதுக்களின் தெரிசனமும் பாதபூசை முதலான, புண்ணியகர்மங்களைச் செய்வதாம்.

சாத்வீகத்திற் தாமசகுணவிர்த்தியின் முடிவென்றுமறிக. இந்தப்படி அநேக ஜன்மஜன்மம் சரியையில் பழகி வருவதனல் ஒரு ஜன்மத்தில் தாமசகுணவிர்த்தி நீங்கி நல்ல புண்ணியம் மேலிடும். புண்ணியம் மேலிட்டால் சற்குரு தெரிசனங்கிடைக்கும். சற்குரு தெரிசனங்கிடைத்தால் அந்தக்குருவையடுத்து, அன்புடன் நம்பி பரமாத்ம விஸ்வாசத்துடன் பணிவிடை செய்து, உடல் பொருளாவி மூன்றுந் தாரைவார்த்து, பிரம சரிய விரதத்தோடுங் கூடியிருப்பதே முன் கூறின சாத்வீககுண விர்த்தியிலுள்ள ராஜசகுண விர்த்தியின் முடிவு. இந்தப்படி, ஸ்ரீ சற்குருவின் திருவடிக்கடுத்து குரங்குக்குட்டியைப்போல் விடாமற் பிடித்துக்கொண்டு பன்னிரண்டு வருஷமடுத்து பாதுகாத்துப் பணிவிடைசெய்து வருவதானல் அந்த சாத்வீககுணத்திலுள்ள தாமச ராஜச குணங்களிரண்டும் அடி

யோடே நசிக்கும். அப்போது தற்சொரூபமான சாத்வீகத்தின் சாத்வீகக் தனியாயும், ஏகமாயும், நிர்மலபரிசுத்தமாயும் விளங்கும். அதற்கு எத்தனை ஜன்மங்கொண்டு வந்தாலும் வரட்டும். அந்த சுத்தசாத்வீகத்தின் சொரூப மாவதெதுவென்றால் சராசரபூதகோடிகளுக்கெல்லாம் அந்தரியாமியாயும், சாக்ஷியாயும், பூரணமாயுமுள்ள பரமாத்மா ஏகமென்றுமறிந்து அறிந்த அறிவை மறவாமல் சராசரத்தையும் ஏகமாய் சற்குருவாகக்கண்டு உபாசிப் பதுதான் சாத்வீகத்தின் சாத்வீகமான சுத்த சாத்வீககுண விர்த்தியின் சொரூபமென்றறிக. இந்தப்படி சாத்வீகமடைவதே சகுணஸ்ரூபமென் றும், சகுணமே நிற்குணமாமென்றுமறிக, ஆதலால் சகுணநிற்குணமிரண் டும் ஏகமாய்ப் பரமாத்மாவாகக் கண்டவனுக்குத் தன் மனமும் பரமாத்மா ஏகமாமென்றறியலாமென்பதற்குச் சந்தேகமுண்டா? சகள நிஷ்கள மிரண்டும் ஏகமாய்க்கண்டக் கண்ணனது முக்குணத்திற்கும் அதீதமான பரிசுத்த நிற்குணமாமென்றுமறிக. இந்திரியங்களையும் மனதையுமடக்கி னல் அது சாந்தமாம். சொரூபம் தனியாம். அதே தானாய் தானென்று மறிக. இதுகளில் சாத்வீகமானது தெளிவு, ராஜசம் கலக்கம், தாமசம் சேரு இந்த மூன்று குணமுமடக்கமானல் பரிசுத்தமாய்ப் பூரணனந்தம் விளங்கும். சந்தேகம் வேண்டாம்.

இதைக்கேட்ட மனம் ஓ சுவாமி! முக்குணசகிதமானமனதை நிற் குணமாக்கும் உபாயம் எப்படியென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சகுணேபாசனையான யோகாப்பியாசத்தினலும், நிஷ்காமகருமத்தினலும்,ஞானவிக்ஞான வைராக்கியத்தினலும்,நிற்குணத் தியான நிஷ்டையினலும் மனம் பரிசுத்தமாய் நிற்குணத்தோடு சகிதமாய் லயமாகும்போது சகுண சொரூபம் சமஸ்தமும் தன்னிலே அடக்கமா மென்றுமறிக. தத்துவங்களை அடக்குவதை சகுணத்தின் லயமென்றும் தத்துவங்களடங்கின பின் பரிசுத்த பரிபூரணமாம், பரமாத்மா என்று மறிவதே ஞானம்.

ஓ மனமே கேள்! மேற்கூறியதெல்லாம் குருசுருதி யுக்தியனுபவத் தினல் சொன்னதல்லாமல் தன்செயலாவது அணுவளவுமில்லையென்பது சத்தியம். எல்லாவற்றிலுங் கடவுளிருப்பதாதலால் எல்லாங் கடவுளுக்கர்ப்ப ணம். குருவினலறிவதே சுருதி, சுருதியினலறிவதே யுக்தி, யுக்தியின லறிவதே அனுபவம், அனுபவத்தினலறிதே எதார்த்தமான ஆத்மஞான மென்றுமறிக.

மனம் ஓ ஆண்டவனே ! நின்திருவடி அருள்செய்த மஹாவாக்கியங்கள் சத்தியம். ஆனாலும் சம்சாரமானது பெறுங் கடலைப்போலவும் ராகத்வேஷாதிகளானது மஹாபயங்கரமான மகரமஸ்யாதி ஜலஜெந்துக்களைப் போலவும் அடிக்கடி ஜனனமரணாதி துன்பங்களுக்கேதுவான சங்கற்ப விகற்பமானது கடலின் அலையைப்போலவும் இப்படிக்கொத்த சம்சாரக் கடலைத் தாண்டுவதற்கு (விதி) அரிகராதிகளாலும் அசாத்தியமாமென்றும் அறிந்தேன். ஆனால் இந்தப் பெருங்கடலுக்குக் கரையாவதெது? இதைத் தாண்டுமுபாயம் எதானாலும் இருந்தால் அதைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! சம்சாரமானது நிஸ்தாரம். அது சத்தியமுமல்ல. நித்தியமுமல்ல. ஆனாலும் அஞ்ஞானிகளுக்கது பெருங்கடலாயும். சத்தியமாயும், நித்தியமாயுந் தோற்றும். அது அசாத்மாவான மாயை. இதைத் தவிர ஆத்மாவிலன்புடன் பக்திவிஸ்வாசமாய் விசாரித்தால் சம்சாரமானது சர்வப்பிராணிகளுக்கும் இருகாலுக்கும் நடுவே இருக்கிறது. அதாவது நடக்கிறதற்காக ஒருகால் வைத்து இரண்டாவது மறுகால் வைத்ததின் நடுவே ஒரு பசுவின் கன்றுக்குட்டியின் குளம்படி பூமியிற்படிய அது நிறைந்த தண்ணீரைப்போலுள்ள சம்சாரக்கடலை தாண்டுவதற்கு லகுவாய் இருக்கிறது. அதாவது விவேகமான ஒரு கப்பலில் ஏறி ஒரு சற்குருவை ஓடக்காரனாக நம்பி சிரத்தாபக்தி விஸ்வாசமென்கிற பாமரங்கட்டி ஸ்ரீ சற்குருவின் திருவருளான பரமானந்தக் காற்றடிக்க அரை நிமிஷத்திற்குள் ஆயாசமில்லாமலும் துக்கமில்லாமலும் அந்தச் சம்சாரமான அக்கடலின் அக்கரைத் தாண்டலாம். சந்தேகம் வேண்டாம்.

ஓ மனமே கேள்! சம்சாரமான சாகரத்திற்குக் கரையானது பிரம்மானந்த பட்டணம் என்றும் அறிக.

மனம். ஓ ஆண்டவனே ! இந்தப்படி சம்சாரம் லகுவாயும் நிஸ்தாரமாயுமிருக்க சம்சாரசாகரம் பெரிய துக்கமாம் என்று பெரியோர்களும் சுருதிகளிலும் கூறியிருக்கிறது. அப்படிக்கூறிய காரணம் என்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! சர்வாந்தரியாமியாயும், சர்வ வியாபகமாயும், நித்தியமாயும், சச்சிதானந்த சொரூபமாயுமுள்ள பரமாத்மாவை மறந்து மனம் அநித்தியமாயுமுள்ள பொய்ப்புலன்களோடுகூடி அதுகளிடத்தில் ஐக்யமாயிருந்த ஆத்மத்துரோகிகளுக்கும், கோடி கோடி கல்பகாலமானு

லும் சம்சாரமான கடலைத்தாண்டுவதற்கு அசாத்தியமான பெருங்கடலா மென்பதற்குச் சந்தேகமில்லை. அதாவது ஆத்மசுகத்தை மறந்து புலன் களோடுகூடி விளையாடுபவர்களுக்கெல்லாம் குருவைக் கொலைசெய்த பஞ்சமாபாதகர்களென்றும் எவன் தன்னுடைய ஆத்மாவினை மறந்து துஷ்கர்மங்களைச்செய்து வீண்காலம் போக்குகிற மஹாபாபியானவன் தன்னைத்தானே கொலைசெய்த பிரம்மஹத்தாவாமென்றுமறிக. சர்வத்திற் கும் காரணமாயும், சர்வப் பிராணிகளுடைய மனதிற்குள்ளும், அந்தரி யாமியாயுமுள்ள பரமாத்மாவை மறந்து பொய்ப்புலன்களில் புலையாடி பந்துவாகப் பாவித்து அதுகளைச் சந்தோஷிப்பித்தால் அதிலுள்ள பல னென்ன? மரணகாலத்தில் இவர்கள் என்ன சகாயம் செய்யுமோ தெரிய வில்லை.

ஓ மனமே இன்னுங்கேள்! சம்சார சாகரமென்பது அசுத்த மனம். அடிக்கடி மனசங்கற்பமடைவதுதான் அலை. மனசங்கற்பமற்றால் அலை அடங்கும். மனம் ஆத்மாவிலக்யமானல் சம்சார சாகரமானது அடி யோடே நசிக்கும். மனோசம்சாரமான சாகரம் நாசமானல் ராகத்துவே ஷாதிகளான ஜலஜெந்துக்களேது?

ஓமனமே கேள்! மனம் சாந்தமானல் பிரம்மானந்தமாயிருக்கும். பிரம்மானந்தமானது பரமாத்மா, அது குணமுமல்ல, நிற்குணமுமல்ல, ஆதியுமல்ல, அந்தமுமல்ல, அளவுந் தொகையுங்கிடையாது. இருளும் வெளியுமல்ல, நாமரூப குணதோஷாதி பேதாபேதங்கள் ஒன்றுமில்லை. விர்த்திக்ஷயாதி சுகதுக்காதிகளொன்றுமில்லை. எதிலும் பற்றற்றதாம். அது பரமானந்தமென்பதே அதற்கு சொரூபம் அல்லாமல் சொல்லக் கூடியதுமல்ல.

ஓ மனமே கேள்! பரமானந்தத்திற்குச் சமானமாய் உபமானம் சொல்லுவதற்கு அதைத்தவிர வேறொரு வஸ்துக்களுமில்லை என்பது சத்தியம்.

ஓ மனமே! அநேக ஞான நூல்களைப்பார்த்தும் பாடம்படித்தும், ராகத்துவேஷாதிகளோடுகூடிய சம்சாரக்கடலில் வீழ்ந்தலையாமல் நிற்வாத மாய் துரியநிலையில் மனமடக்கி ஆத்மாவினை ஆத்மாவில் ஐக்யம் செய்தால் நிர்மலமாய்த் துரியநிலையையடைந்து பிரம்மானந்த பதமடையலாம் சந்தேகம் வேண்டாம். துரியநிலையாவது சாத்வீகம், ராஜசம், தாமசம், இந்த மூன்று குணங்களும் ஏகமாய்ச்சொரூபித்துச் சகனமாயிருந்து முடி

வில் ஆத்மாவை ஆகாசம்போல் அகண்டபரிபூரணமாய் நிஷ்களமாயிருப் பதே தூரியநிலை. இந்தப்படியுள்ள துரியநிலையை அடைவதாம் பிரம்மா னந்தமென்றுமறிக.

மனம். ஓ ஆண்டவனே. வர்ணுசிரமாதி குலாச்சாரதர்மங்களை யெல்லாம்விட்டு நிராசையாய் ஒரு சற்குருவையடுத்து அருள்பெற்ற மஹான்களுக்கு விதிநிஷேதமுண்டா? அவாளுக்குடைய ஆசாரமென்ன தொலையாத கொடியபாபங்களும் தொலையும்படியுள்ள மகாபுண்ணிய தீர்த்தமாவதெது? இழிவான குலம்விட்டு மேலான ஜாதியாகும்பொரு ட்டுப் புண்ணிய க்ஷேத்திரமாவதெதுவென்று கேட்க அறிவு கூறிய.

ஓ மனமே கேள்! வர்ணுசிரமாதி குலாச்சாரங்களும் விதிநிஷேதாதி தர்மகர்மங்களுமெல்லாம் காமியகர்மிகளுக்குடைத்ததாம். இதைத்தவிர அதி வர்ணுசிரமத்தோடுகூடிய ஒரு சற்குருவையடுத்து அருள்பெற்ற மஹான் கள் விதிநிஷேதமான கர்மங்களை ஆசரித்தாலும் அது நிஷேதமல்ல? தீராதகொடிய பாபங்களும் தொலையும் தீர்த்தமாவது ஸ்ரீ சற்குருவின் பாததீர்த்தமே கோடிபாபவிஞசனமான கோடிதீர்த்தமென்றறிக. இழி வான ஜாதிவிட்டுமேலான ஜாதியாகும்பொருட்டு உபாயம் யாதெனில் ஸ்ரீ சற்குருவையடுத்து ஏவல்செய்வதாம். குருவின் போசன உச்சிட்டம் புசித்தால் குலமெல்லாம் அடியோடே பரிசுத்தமடையும்.

ஓ மனமே கேள்! எல்லாம் பிரம்மமயமாகப்பார்த்த மஹான்களின் கண் பார்வையினுலும், கைபரிசனத்தினுலும், ஆலிங்கனத்தினுலும் சர்வ பாபமும் அடியோடே நசித்துப் பரிசுத்தமாகுமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம். இதை சுருதி முதலான பல நூல்களிலும் மஹாத்மாக்களும் கூறியிருக்கிறது. அது சத்தியமென்று நம்பாதபேர்களுக்குப் பாபமும், தொலையா கர்மமும் தொலையா. பக்தியும் வராது. ஞானமுமடையா. இதைக்கேட்ட மனம்.

ஓ சுவாமி! இந்த உலகத்தின்கண் பிராணிகளில் பிரதானம் மானிட ஜன்மம் ஆதலால் மனிதர்களில் துக்கமற்று சுகமாயிருப்பவர்களாறென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மானிட ஜன்மமாவது எல்லாவற்றிலும் சிரேஷ் டம். அதற்குச் சந்தேகமில்லை. ஆனுலும் ஜனனகாலமுதல் மரணபரி யந்தம் துக்கமில்லாமல் சுகமாயிருந்தவர்கள் ஒருவருங் கிடையாதென்பது

சத்தியம். ஏனென்றால் புண்ணியபாப சமமாய் வந்தகாலத்தில் மாயா வசால் பிறப்பது மானிட சரீரம். இந்த மனிதர்களிலும் சிலர் பாபகர்ம மெல்லாம்விட்டுப் புண்ணிய கர்மமே செய்வார்கள். அப்படியே புண்ணிய கர்மங்கள் செய்து பழகிவந்தாலும் அதில் கொஞ்சமானாலும் பாபமும்கூடி வந்து சேருவது சுபாவீகம். ஆனாலும் புண்ணிய மிகுதியிருப்பதாதலால் மரணமடைந்த பின் மேலான சுவர்க்கலோகங் கிடைக்கும். அப்படிச் சுவர்க்கத்திலிருந்தும் புண்ணியத்துக்குத் தகுந்தபடி போகங்களை அனுப வித்தபின் புண்ணியங் குறைந்து மிகுதிய புண்ணியம் பாபத்தோடு சமமா னால் மறுபடியும் கீழே பூமியில் வந்து மானிட சரீரம் எடுப்பது சகஜம். இந்தப்படி மேலுங்கீழும் போக்கும் வரவுமாய் ஜனனமரணாதி துன்பங் களை அனுபவிப்பது சுபாவீகம். இதுவும் பந்தம்தான். ஆனாலும் இது களில் சுவர்க்கம் பொன்னின் சங்கிலியாம் பந்தம். நரகம் இரும்புச் சங்கிலி யால் பந்தமென்றுமறிக. இந்தப்படி நரகமும், சுவர்க்கமும், ஜனனமர ணாதி துன்பமும் அடிக்கடி அனுபவிப்பது சுபாவீகம். இந்தப்படி புண் ணியபாபத்துக்குத் தகுந்தபடி கட்டுப்பட்டு மேலுங்கீழுமான நரகசுவர்க்கங் களை அனுபவித்தபின் பூர்வவாசனைக்குத் தகுந்தபடி பூமியில் மானிட சரீரங்கிடைத்தாலும் சுகதுக்கங்களிரண்டும் அனுபவிப்பதும், அடிக்கடி ஆவதும், அழிவதும் சுபாவீகம். அதுவுமல்ல இந்த மூன்றுலகமும் சுக துக்கமிச்சா மூன்றும் சகசமாயிருக்கிறது. அதானது இந்திராதி தேவர் களானாலும் விட்டகுறை அனுபவியாமல் விடாதென்பது கருத்து. ஆத லால் மானிடஜாதியாய்ப் பிறந்தால் எல்லாந்துன்பமாயிருந்தாலும் சகிக்க முடியாத துன்பம் ஐந்து. அதானது முதலாவது கர்ப்பவாச துன்பம், இரண்டாவது ஜனன துன்பம், மூன்றாவது மரணதுன்பம், நான்காவது எமதண்டனை துன்பம், ஐந்தாவது நரகதுன்பம், ஆனாலும் முன்கூறிய புண்ணியவான்களுக்கு எமதண்டனையும், நரகமுங் கிடையாது. மற்றப் பாபிகளுக்கெல்லாம் முன்கூறினபடியுள்ள ஐந்துவித துன்பங்களுமிருக் கும். இதைப் பாபிகளறியமாட்டார்கள் ஏனென்றால் அறிவுடைய புண்ணியவான்கள் பாபம் செய்யாரென்பது கருத்து. ஆனாலும் புண்ணிய வான்களுங்கூடி மயங்குவார்கள். ஏனென்றால் புண்ணியவான்களுக்கு எமதண்டனையும், நரகமும் இவ்விரண்டுமில்லாவிட்டாலும் கர்ப்பவாச துன்பமும், ஜனனதுன்பமும், மரணதுன்பமும் இம்மூன்றும் அடிக்கடி வந்துகொண்டேயிருக்கிறது. இதை மாற்றிக்கொள்ளும் உபாயம் எப்படி எனில் பலாபேக்ஷைவிட்டுப் புண்ணிய கர்மங்களை ஈஸ்வரார்ப்பணமாகச் செய்து பழகிவருவதானால் ஈஸ்வரப் பிரசாதமுண்டாகும். அப்படி ஈஸ்வரப் பிரசாதமுண்டானால் மஹத்துக்களில் பக்திவிஸ்வாசம் வரும். அப்படி

மஹத்துக்களில் பக்திவிஸ்வாசம் வந்தால் ஒரு சற்குருவை அடையலாம். ஒரு சற்குருவை அடைந்தால் ஆண்டவனடிமையாக நம்பி சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் சேவிப்பதானல் கர்ப்பவாச ஜனனமரணதி துன்பங்கள் அடியோடே நாசமடையும்பொருட்டு அருள் கிடைக்கும். அப்படி அருள் கிடைத்தால் அமுர்தாநந்த கைவல்லிய பதமடையலாமென்பது சத்தியம். அங்ஙனம் எப்படியெனில் ஜனனமரணதி துன்பங்களைவிட்டு மோக்ஷமடையும்பொருட்டு அபேக்ஷையோடுகூடி விடைய வைராக்கியத்துடன் ஒரு ஞானதேசிகரை அடுத்து உடல் பொருள் ஆவி மூன்றும் சத்தியமாய் அந்தக் குருவின் திருவடிக்கி அர்ப்பணமாக்கவேண்டும். அதாவது எப்படியெனில் ஜனனமரணதி துன்பங்களுக்கேதுவான ராகத்துவேஷாதிகளுக்கு மூலகாரணமாயும், சத்தியமாயும், நித்திய சுகமாயுமுள்ள பொருளை அபகரிக்கப்பட்டவர்களுமான தாரபுத்திரர்களாயுள்ள சோரரளிடத்தில் விஸ்வாசமாகக் கொடுத்துவைத்த உடல் பொருள் ஆவிமூன்றும் பிடிங்கித் தன் கைவசமாக்கிக்கொண்டு அதைச் சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் சத்தியமாய் ஸ்ரீ சற்குருவின் திருவடியில் தாரைவார்த்து பாதுகாத்துப் பணிவிடைசெய்து பழகிவரவே இறைவனருளால் முதலாவது மாயையின் சொரூபத்தை அறிவதாம். இரண்டாவது விவேகம், வைராக்கியம், சமாதி இந்தப்படி நான்கு சாதனங்கள் அவசியம் வேண்டும். மூன்றுவது நிர்ச்சங்கனுயிருந்து குருவைச்சேவித்து விஞ்ஞானம் அடையவேண்டும். நான்காவது குருவின் திருவருள் பெற்றபின் எதார்த்த ஞானம் அடையலாம். சந்தேகம் வேண்டாம். இந்தப்படி ஞேயமாயுள்ள பரமாத்ம வஸ்துவை அறியும்போது மாயாசம்பந்த மயமெல்லாம் அடியோடு நசித்து ஜனனமரணதி துன்பங்களும் நீங்கி ஜீவன் முக்தி அடையலாம். இதைத் தவிர ஆசாபாசத்தில் கட்டுப்பட்டு ராகத்துவேஷாதி அபிமானத்தோடு கூடிய அஞ்ஞானிகளுக்கு இது கலியுகமாதலால் அவாளுக்குக் கலி எங்கும் பரிபூரணமாய் இருக்கிறது. நிராசையாய் அருள் பெற்று பரிபூரண ஆத்மாவாய் பிர்ம்மானந்தமாய் இருக்கும் மெஞ்ஞானிகளுக்கு இது கிரேதாயுகம் ஆதலால் அவாளுக்கு மாத்திரம் கடவுள் பரிபூரணமாதலால் கலி அணுவளவும் இல்லை என்பது சத்தியம். இதனுடைய உண்மை மஹத்துக்களை அன்புற்றுக் கண்டவர்களுக்குத்தான் தெரியும்.

ஓ மனமே கேள்! பூமிமுதல் மூலமாயை பரியந்தமுள்ள சர்வப்பிரபஞ்ச வஸ்துக்களுக்கும் ஈசனுய் இருந்தாலும் இகபரம் இரண்டிலும் சுகம் அணுவளவும் இல்லை. நிராசையாய் அருள் பெற்று நிர்ச்சலமாய் ஒன்றும் இல்லாமல் சும்மாயிருக்கும் மஹத்துக்களானவர்கள் யாரோ அவர்கள் தான் நித்திய சுகிகள் என்றும் அறிக. ஆத்மாவானது பரிபூரணமாயிருந்

தாலும் காமகர்மத்தில் சிரத்தையுடைய அஞ்ஞானிகளுடைய அந்தரங்கம் ஆணவாதி மும்மலங்களால் மறைக்கப்பட்டதனுல் ஆத்மாவானது அப்பிரத்தியக்ஷமாயும் வெகு தூரமாய்த் தோற்றுவது சுபாவீகம். நிஷ்காமசர்க்கருமிகளாய் நிராசையாய் சற்குரு பக்தராயுள்ள மஹத்துக்களுக்கு ஆத்மா பரிபூரணமாயும் எங்கும் பிரத்தியக்ஷமாயும் இருக்குமென்பதே முன்கூறிய தாத்பரியம்.

மனம். ஓ சுவாமி! இதுகள் அப்படியிருக்க தாமசகுணத்தில் பிறந்த ஜீவர்களுக்கு என்னகதி என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சாத்வீகம், ராஜசம், தாமசம் என்று மூன்று குணம். இந்த மூன்று குணத்தில் பிறந்த ஜீவர்களில் தாமச குணத்தில் பிறந்த ஜீவர்கள் எல்லாம் அதோகதி அடைவார்கள். சாத்வீக குணத்தில் பிறந்த ஜீவர்கள் எல்லாம் ஊர்த்தகதி அடைவார்கள். ராஜசகுணத்தில் பிறந்த ஜீவர்கள் எல்லாம் மறுபடியும் அடிக்கடி மானிடஜாதியாய்ப் பிறப்பார்கள். இந்தப்படி முக்குணத்தில் பிறந்த ஜீவர்களின் கதி. இப்படிக்கொத்த ஜீவர்களின் க்ஷேமத்தின் பொருட்டு ஞானம், கர்மம், பக்தி இதுகள் மூன்றும் புருஷார்த்த சாதனமாம் என்றும் வேதங்கூறியது. இதுகளில் ஞானம் என்பது மோக்ஷகேதுவாயும், கர்மம் என்பது பந்தகேதுவாயும் இருக்கிறது. பக்தி சித்தசுத்தி காரணமாயும் இருக்கும். ஆனாலும் ஞானமாவது ஆத்ம தரிசனம். ஆத்மாவானது அவ்வியக்தம். ஆகலால் அதைப் பார்ப்பது அசாத்தியம்.

மனம் ஓ சுவாமி! இதுகள் இப்படி கவலையாயிருக்க எப்படி ஜீவர்கள் கடைத்தேரும் மார்க்கம் என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! எதார்த்தக்ஞானம் அடைந்து மோக்ஷமடையும் பொருட்டு அபேக்ஷையுடைய மாந்தர்கள் பந்தத்துக்கு ஏதுவான கரும காண்டத்தை அடியோடு தூரத்தள்ளிவிட்டு மோக்ஷகேதுவான ஞான காண்டத்தை மேலாயும் மகிமை உடையதாயும் பாவித்து இது இரண்டுக்கும் மத்திபமான உபாசனுகாண்டத்தில் இருந்தும் ஸ்ரீ சற்குருவின் திருவடி பூசை முதலான பக்தியோகத்தை அனுஷ்டானம் செய்து பழகிவருவதானுல் அந்தக்கரணம் பரிசுத்தமாகும். அந்தக்கரணம் பரிசுத்தமானுல் இறைவன் அருளாகும் இறைவன் அருளானுல் எதார்த்தக் ஞானம் காதலாமலகம்போல் கைவசமாகும். இந்தப்படி உண்மையாய் எதார்த்தக் ஞானம் கைவசமானுல் ஜீவன் முக்தி அடையலாம். சந்தேகம்வேண்டாம் இதற்கு ஸ்ரீ சற்குருவின் பக்தியன்றி உபாயம் வேறில்லை. ஸ்ரீ சற்குரு

பக்தனுக்குப் பிதாவானது ஸ்ரீ சற்குருவாம். மாதாவானது சிற்சத்தியாம். சம்சாரமானது மூன்று குணங்களுமாம். ஆதலால் முக்குணம் மூன்றும் முத்தொழில்களும் மூன்று விதமான மூலவாசனையும் அடியோடு நசிப்பதே ஜீவன் முக்தியென்றும் அறிக.

மனம். ஓ சுவாமி! தாமசகுணம் மிகுதியாய் இக்தக் கலியுகத்தின் கண் அநேக ஜனங்கள் மகிமையுடைய வேதாந்த நூல்களை முகபாடம் படித்தும் கூட்டங்கூடிப் பிரசங்கம் செய்தும் ஆத்மாவானது ஏகம் என்றும், துவிதம் என்றும் குதர்க்கம்பேசி ஒன்றுக்கொன்று சண்டைபிடிக்கக் காரணம் என்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஆத்மாவை மறைக்கப்பட்டது ஆணவாதி மும்மலங்களுமாம். அந்த மும்மலங்களும் அற்று ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற்ற மஹான்களே அத்வைதிகள் என்றும் அறிக. அதானது அனாத்மவஸ்துக்களாயுள்ள சத்தாதி விஷயங்களான இந்திரியங்களும் அநேக சங்கல்ப விகல்பத்தோடு கூடிய அந்தக்கரணமும் அடக்கி மனோலயம் அடைந்தால் அந்த மஹான்கள்தான் குணாதீதப் பொருளாயும், எதார்த்தக்ஞானிகளாயும், ஏகமென்றும், துவிதமென்றும் என்கிற பிடிவாதம் விட்டவர்களாயும் உள்ள மஹத்துக்களுக்கு ஆத்மாவானது ஏகம். இதைத் தவிர சப்தப்பிரமாணங்களினாலும், வாக்கு மனக்காயங்களினாலும் ஆத்மாவை அறியக்கூடியதல்ல என்கிற மஹா வாக்கியப்பிரமாணங்களே சத்தியம். சப்தப்பிரமாணங்களுக்குக் காரணம் வாக்கு, நாக்கு இதுகள் இரண்டு விடயங்களுமாம். இதுகளை உண்மையாக நம்பிக்கொண்டிருப்பது மனம் ஒன்றேயாம். அத்வைதிகளான மஹத்துக்கள் இதுகளை அனாத்மவஸ்துக்களாம் என்றும் அறிவார்கள்.

ஓ மனமே கேள்! இந்த உலகம் பொய். பொய்என்றும் அந்த பொய்யான வாக்கு மனக்காயங்களைக் கொண்டு பேசித்திரிவோர்களும் பொய் ஞானிகளாமென்பதற்குச் சந்தேகமுண்டா ஏனென்றால் வாக்குமனக்காயங்களாலும் எட்டாதவஸ்து ஆத்மாவாதலால் பொய்யான இந்திரியங்களினால் சொன்ன வாக்கியங்களுமெல்லாம் பொய். பொய் என்பதற்குச் சந்தேகமில்லை.

ஓ மனமே கேள்! இந்த உலகத்தின்கண் ஜீவர்கள் செய்யும் வினைகளெல்லாம் தன் செலாமென்றும் சிலர், அதல்ல ஈசன் செயலாமென்றும் சிலர், ஆனால் இதுகளிரண்டு பாவனையும் ஜீவர்களுக்கெல்லாம் பந்தத்திற்கும் நரகத்திற்கும் காரணம் இதைத்தவிர வேறில்லை. ஆதலால் தன் செய

லென்றும், ஈசன் செயலென்றும் தோற்றப்பட்ட இருபாவனையும் அதின் மூல வாசனையும் அடியோடே நாசமானால் ஜீவன் முக்தனுமெனப்பதற்குச் சந்தேகம் வேண்டாம். அங்ஙனம், எப்படி நாசமாக்குவதென்றால், முத லாவது பிராரத்துவ வசத்தால் தான் தான் செய்யும் கர்மங்களை யெல்லாம் தன் செயலாக எண்ணுமல் ஈசன் செயலாக எண்ணி சர்வ கர்மமும் நிஷ் காமமாய் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்து பழகி வருவதானால் தன் செயல் அடியோடே நசிக்கும். தன் செயல் அற்றவிடத்தில் கருமவினைகள் அணுவளவும் வந்தணுகாதென்பது நிச்சயம். அங்ஙனம் தன் செயல் அற் றால் ஈசன் செயலுமில்லை. எப்படியெனில், கருமகர்த்தா ஜீவன், அதுகளுக் கெல்லாம் ஈசன் சாக்ஷிகாரணமாதலால் அவர் கருமகர்த்தாவல்ல. ஆதலால் ஜீவர்களுடைய கர்ம பந்தம் விட்டால் ஜீவன் முக்தனும்.

ஓ மனமே கேள்! முன்கூறியபடி தன் செயலாக எண்ணிச்செய்து பழகிவரும் கர்மங்களெல்லாம் ஈசன் செயலாமென்றும், அதல்ல ஜீவன் செயலாமென்றும் நினைப்பது மனம் ஒன்றேயாம். அப்படி மனதிற்குத் தோற்றக் காரணம், மூன்றுகுண மாயாசூத்திரத்தோடு கூடிக்கலந்திருப்ப தாதலால் அந்த மனதிற்கு நானெனதென்கிற அகங்காரமும், அகமமதை யும் உண்டாயிற்று ராஜசம், தாமசம் இரண்டு குணங்களும் நாசமானால் அந்தச் ஜீவபாவனையும் தன் செயலும் அடியோடே நசிக்கும். அப்படி ஜீவபாவனையும் ராஜச, தாமசமிரண்டும் அடங்கிவிட்டாலும் சாத்மீககுண மிருக்கும். அந்தச் சாத்மீக குணமிருந்தமட்டும் மனதிற்கு ஈஸ்வரபாவனை இருக்கும். அந்தச் சாத்மீகமானதைப் பரிசுத்தமான ஞானசிற்சக்தியில் அடக்கி அருள் பெற்றால் அந்தச் சாத்மீககுணமும் அடியோடே நசிக்கும். இந்தப்படி மூன்று குணங்களும் நாசமடைந்து அருள் பெற்றால் ஜீவன் ஏது, ஜீவன் செயலாவதேது, ஜீவனும் ஜீவன் செயலுமில்லாவிட்டால் ஈச னென்பதும், ஈசன் செயலாவதும் பொய். எல்லாம் நிர்க்குணமொன் றேயாம். ஆனாலும் மனோலயத்தின்கண் சர்வசந்தேகங்களுந் தீர்ந்து பிரம் மானந்தமாய்த் தனியே இருக்கலாம். அதற்கு முதலாவது சித்தம் பரிசுத் தமாக்கி ஸ்ரீ சற்குருவின் திருவருள் நான்கு மஹாவாக்கியப் பிரமாணங் களாகியசுருதி, யுக்தி அனுபவத்தினால் அன்புற்றுப் பார்த்தால் ஜீவனே ஈசன், ஈசனே ஜீவன். இந்தப்படி ஜகஜீவபரம் பரமாத்மா இதுகள் நான்கும் ஏகமாய், அபேதமாய், நிவாததீபம்போல் நிர்மலப்பிரகாசமாய் விளங்கும். அப்போது சர்வசந்தேகங்களுந் தீர்ந்து தெளிவடைந்து அருள் பெற்றுப் பரமானந்தபதமடையலாம். சந்தேகம் வேண்டாம். ஆனால் இது மெய்யறி விளக்கமென்றும், பரமானந்த விளக்கமென்றும் மஹாத்மாக் களின் நிச்சயம்.

மனம். ஓ சுவாமி! தொலையாத ஜனனத்தை இதோடே தொலைத்து இந்த ஜன்மத்தில் ஜீவன்முக்தி அடையும்பொருட்டு அப்பியாசம் செய்யும் முறை அடியேனுக்கு உபதேசித்தருளவேண்டுமென்று கேழ்க்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! காலங்கழிக்கும்பொருட்டு அப்பியாசமாவது அனேகவிதம், அதுகள் எல்லாவற்றிலுஞ் சிறந்தது மோக்ஷமடையும் பொருட்டு ஞானப்பியாசம் செய்வதாம் என்றறிக. ஆனாலும் அதற்கு அதிகாரபேதமுண்டு. அதாவது நரர்களின் க்ஷேமத்தின்பொருட்டு பகவான் ஆதிகாலத்தில் நான்கு வேதம் மூன்றுகாண்டமாக முறைமுறையாக கூறப்பட்டிருக்கிறது. அதானது ஞானம், கர்மம், பக்தி இதுகள் மூன்றும் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமாமென்றுமறிக. இதுகளில் ஞானதிகாரியாமவன் முதலாவது நல்ல விவேகசீலனாய் விடயங்களில் தீவிர வைராக்கியத்துடன் ஒரு சற்குருவையடுத்து சமாதி சாதனங்களுமடைந்து மும்மலங்களுமற்று அந்தக்கணம் பரிசுத்தமாய் ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற்ற மஹான்கள்தான் பூரணஞ்ஞானத்திற்கு அதிகாரியாம் என்றுமறிக. வைராக்கியமில்லாது போகத்தில் இச்சையுடையவாளுக்கு கர்மகாண்டமே அதிகாரம். கொஞ்சங்கொஞ்சமாக மனச்சுத்தி வந்தவாளுக்குப் பக்தி காண்டமே அதிகாரமென்றும் வேதங் கூறப்பட்டிருக்கிறது.

ஓ மனமே கேள்! எல்லாவற்றிலும் சிறந்தது ஞானம் ஒன்றேயாம். வேறே இல்லை, சந்தேகம் வேண்டாம். ஞானசூரியன் உதயமானால் மனமான பத்மம் மலரும். அங்ஙனம், மனமான பத்மம் மலர்ந்தவுடன அதில் அமுர்தமான மதுவிருக்கும். அந்த அமுர்தமான மதுவைப் பானஞ்செய்யும்பொருட்டு மதுவண்டைப்போல் திருஅவதாரமெடுத்து ஸ்ரீ சற்குருவாய் எழுந்தருளிவரும். அப்படி எழுந்தருளிவந்து அந்த அமுர்தமான மதுவைப் பானஞ்செய்துகொண்டு ஆனந்தமாய்ப் பரிபூரணமாய்ப் பரந்தெங்கும் சஞ்சரிப்பார்கள். இந்த முறைப்படி அப்பியாசஞ்செய்து ஞானயோகமடைவதே சுத்ததத்துவக் ஞானமென்றும் யதார்த்தக்ஞானம் என்றும் அதனால் நித்தியகைவல்லியமென்றும் மஹான்கள் சம்மதம். இதைத்தவிர மற்றுள்ள சாஸ்திரக்ஞானமெல்லாம் புத்திச் சஞ்சலமாயும் தாக்கரமாயும் இருக்கும். ஏனென்றால் தாமரை அரும்பாயிருந்த காலத்தில் தினசரி கோடிசூரியன் உதயமானாலும் மலருமா? மலராது. அதுபோல் சுத்தமில்லாதமனதிற்குக் கோடி ஞானசாஸ்திரங்களை உபதேசம்பண்ணினாலும் முகபாடம் படித்தாலும் ஞானத்தின் கெந்தமானாலும் வருமா? வராதென்பது நிச்சயம். ஆதலால் அதிருவிட்டு நடப்பவர்களெல்லாம் அசாத்யக் ஞானிக

ளாமென்றுமறிக. ஆதலால்முதலாவது அந்தக்கரணம் பரிசுத்தமடையாமல் சுயங்கிருதமாய் ஞானநூல்களைப் படித்தால் ஞானம்வரா என்றும் அந்தக் கரணம் பரிசுத்தமானால் முன்கூறிய மதுவண்டைப்போல் பகவானே ஒரு குருவாய் எழுந்தருளிவந்து மனதுக்குள்நின்று ஞானோபதேசம் செய்வார். இதுதான் நித்திய சத்திய சுத்ததத்துவக்ஞான மென்றும் மஹான்கள் சம்மதம். சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!! இதற்குச் சற்குருவினிடத்திலுள்ள ஏகாந்த பக்திவிஸ்வாசம் ஒன்றே முக்கியசாதனம், இதைத்தவிரவேறில்லை.

மனம். ஓ சுவாமி! ஏகாந்த பக்தி என்பது ஒரு குருவையடுத்துச் சேவிப்பதாம் என்றும், அப்படி ஒருவரை ஒருவர் சேவிப்பதானால் துவிதம் வராதா? அப்படியே துவிதமாகச்சேவிப்பதானால் அத்வீதத்துக்கு விரோதமல்லவா? அப்படித் துவிதமாய்ச் சேவிப்பவனுக்கு அத்வீதக்ஞானம் எப்படி வருமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! மஹா யோகிகளானாலும் மஹாக்ஞானிகளானாலும் மஹா பண்டிதரானாலும் பரமக்ஞான சற்குருவினிடத்திலுள்ள ஏகாந்த பக்திவிஸ்வாசங்கொண்டல்லாமல் ஏகமாயுள்ள பரமாத்மாவைப் பார்ப்பதரிது. இதுசத்தியம். ஏகாந்தபக்தி எப்படியெனில் ஸ்ரீசற்குருவின் திருவருளால் சர்வாந்திரியாமியாயும் சர்வசாக்ஷியாயும் ஏகமாயும் பரிபூரணமாயுமுள்ள பரமாத்மாவைத்தவிர அணுவளவும் வேறில்லை என்கிற பரம விஸ்வாசமுள்ள ஏகாந்த பக்தி யோகிகளுக்குத் துவிதம் யெப்படிவரும். ஓ மனமே நீ கருவிக்ஞானமான பாழுங்கிணற்றிலும் காமகர்மமான ராகத்துவேஷாதியான சம்சாரசாகரத்தில் வீழ்ந்து கெட்டலையாமல் குருவின் சரணாரவிந்தத்தில் பக்தி விஸ்வாசமானால் பரமானந்த பதமடையலாம். சந்தேகம்வேண்டாம்

ஓ மனமே இன்னுங்கேள்! ஏகாந்தபக்தியினால் அடையும் பயனாவது பரமாத்மாவின் விடயம். அது ஞானசிற்சத்தி. அதானது பரமாத்மாவைத்தவிர வேறல்ல. அதுதான் ஞானசிற்சத்தி என்றும் பிர்ம்மானந்த வஸ்துவென்றும் மஹான்கள் சம்மதம். ஆதலால் பரமானந்த சிற்சத்தியும் பரமக்ஞானமும் பரமபக்தியும் வேறுவேறல்ல. ஏகமாமென்றும் மஹான்கள் சம்மதம். நாமரூபாதி சர்வப்பிரபஞ்ச வஸ்துக்களிலும் சரீரத்திலும் உள்ள ஆசை அகமமதையும் அகங்காரமும் மகாமோகமும் நீக்கி அன்புடன் அருள்பெற்று ஆத்மா பரமாத்மாவில் ஐக்யமாய் ஆனந்தமாய் இருந்த மகா பக்தனுக்குத் துவிதாத்வைத சங்கற்பவிகற்பங்கள் அணுவளவும் இராதென்பது சத்தியம். சத்தியம். ஸ்ரீ சற்குருவின் திருவடி ஆணை சத்தியம்.

மனம் ஓ சுவாமி! இந்த உலகத்தின்கண் மோக்ஷத்தை விரும்பின ஜனங்கள் மகான்களை அடுத்து நம்பி சேவிக்கவேண்டுமென்றும் அப்படிச் சேவித்தால் ஸ்ரீ சற்குருவின் திருவருள்பெற்று பிர்ம்மானந்தபதம் அடையலாமென்றும் வேதசாஸ்திரபுராண இதிகாசங்களும் மஹாத்துக்களும் கூறப்பட்டது சரி. ஆனால் இந்த உலகத்துக்கு மூலகாரணமாயும் ஜகத்குருவாயுமுள்ள விநாயகமூர்த்தியை உபாசித்தால் போதாதா. இதைத்தவிர வேறொரு குரு உண்டா? இந்தப்படி எதார்த்தமிருக்க வேறே ஒரு குருவைத் தேடுவதும் அஞ்ஞானமல்லவா வென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! நீ சொன்னது உண்மைதான்? அதற்குச் சந்தேகமில்லை. ஆனாலும், ஸ்தூலமாய்க் காணப்பட்ட சராசரப் பிரபஞ்சவிருக்ஷத்துக்கு மூலவித்தாயும், நிர்மலமாயும், பரிபூரணமாயும், குருவாயுமுள்ளது பிரணவஸ்சொரூபம் ஒன்றுதான். அந்தப் பிரணவஸ்சொரூபமே விநாயகமூர்த்தியென்றும், குருவென்றும் உலகர்சம்மதம், சந்தேகமில்லை. ஆனால் அதைக்கண்டு உபாசிப்பது திருமூர்த்திகளாலும் அசாத்தியம். ஏனென்றால், அவ்வியக்தமாயுள்ள விநாயகமூர்த்தியானது உலகசிருஷ்டிக்குமுன் ஏகமாயும், ஆனந்தமாயும், அரூபமாயும், பரிபூரணமாயுள்ளதாதலால் அதை மறைக்கபட்டதெதுவென்றால் மூலகுண்டலிஒன்றுதான். அந்த மூலகுண்டலியாவது எதுவென்றால், பிரணவஸ்சொரூபமான மூல விநாயகரும், சிற்சத்தியான வல்லபைசத்தியும் ஏகமாய்க்கூடி இரண்டறக்கலந்திருப்பதாதலால் அதிலிருந்தும் தோற்றப்பட்ட ஸ்வயம்பிரகாசமாம் மூலகுண்டலி. அந்த சத்திதான் தன் பதியான கணநாயகரை மறைக்கப்பட்டதென்றறிக. அந்தக் குண்டலி சத்தி ஒன்றுதான் மூன்று குணத்துக்கும், மூவுலகுக்கும், மூன்று மூர்த்திகளுக்கும், மூலகாரணமாயும், அநீசமாயுமுள்ளதாதலால் அந்தக் குண்டலி வலையை அறுத்து சிற்சொரூபமாயும், பிரணவஸ்சொரூபமாயுமுள்ள விநாயகமூர்த்தியைப் பார்த்து உபாசிப்பதற்குத் திருமூர்த்திகளாலும் அசாத்தியமாமென்றும் முன்கூறிய தாற்பரியம். ஏனென்றால், அந்தப் பிரணவஸ்சொரூபமானது குணாதீதப் பொருளாதலால் குணசங்கிகளாயுள்ள சம்சாரிகளுக்கு அதைப்பார்ப்பது அசாத்தியமாமென்றும் தாற்பரியம். ஆதலால் சராசரப் பிராணிகளும் அந்தக் குண்டலி வலைக்குள் பந்தப்பட்டிருக்கிறது. ஆகலால், அந்தக் குண்டலி வலையை அறுப்பது மஹாப்பிரயாசம். ஆனாலும், இதைத்தவிர முன்கூறியபடி ஒரு ஞானதேசிகரையடுத்து அருள் பெற்றால் குண்டலி வலையை அறுக்கலாம்? அறுத்தால் சராசரபிராணிகளிடத்திலும் அந்த விநாயகரைப் பார்க்கலாம்? சந்தேகம்வேண்டாம். அப்படிச் சராசரத்திலும் விநாயகமூர்த்தியை

உண்மையாகப் பார்ப்போமானல் தன்னிடத்திலும் ஒரு விநாயகரூபம் தோன்றும். இதற்குச் சந்தேகம் வேண்டாம். அங்ஙனம் எப்படியெனில், ஒரு சற்குருவை நம்பி இதுவே பிரமசொரூபம், அதுவே பிரணவஸ்சொரூபமான விநாயகமூர்த்தி என்கிற பக்திவிஸ்வாசமாகக் கண்டு சேவிப்பவர்களுக்கு விநாயகமூர்த்தி பிரத்தியக்ஷமாயிருக்கும். இந்தப்படி விநாயகமூர்த்தியைப் பார்ப்பவர்களுக்கு விநாயகமூர்த்தியே குரு, குருவே விநாயகமூர்த்தி இதுகளிரண்டல்ல. ஏகமாமென்றுமறிக. குருவானதுப் பரமாத்ம ஞானசிற்சத்தி, அந்தப் பரமாத்ம ஞானசிற்சத்தியின் சுபாவீகம் எப்படியெனில், சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாயும், சர்வபூதங்களும் அந்த ஆத்மாவுக்கு அந்தரியாமியாயும் இருப்பதாதலால் அதை ஒருவருக்கும் பார்க்கமுடியாதென்பது நிஜம். இந்தப்படி சர்வபூதங்களும் தாங்கள் தாங்களுடைய ஆத்மவஸ்துவை தாங்கள் தாங்களுக்குத் தெரியவொட்டாமல் தன்னைத்தான் மறந்த மறப்பே ஆவரண சக்தி. இதின் முன்கூறினபடி அவித்தையிற் பிறந்த மனிதர்களில் ஒருவன் புண்ணிய விசேஷத்தால் வித்தியா மார்க்கத்தையடைந்து மஹாத்மாவாய்ப் பிறக்கும். அப்படிப் பிறந்தும் விஷ்ணுமாயையைத் தாண்டிப் பிறப்பறுத்த மஹான்கள்தான் சற்குரு. அப்படிக்கொத்த சற்குருவை ஒரு மனிதனுக எண்ணுமல் பரமாத்மாவாக நம்பவேணும். அந்தப்படி பக்தி விஸ்வாசமாகச் சேவித்துப் பழகிவருவதானல், ஸ்ரீ சற்குருநாதன் கிருபையால் அந்த சிஷ்யனுடைய பரிபக்குவகாலம் பார்த்து அருள் செய்வார்கள். அப்போது தன்னுடைய ஆத்மாவுக்குள்ளே சராசரத்தையும், சராசரத்துக்குள்ளே தன்னுடைய ஆத்மாவினையும் பார்க்கலாம். சந்தேகம்வேண்டாம். பேரின்பமான சுகமே நித்தியசுகம். அது ஸ்ரீதேவியாமென்றுமறிக. அந்த ஸ்ரீதேவியின் சொரூபமாவது சாந்தம். அதனுடைய சுபாவீகமானது பரமானந்தம். அந்தப் பரமானந்தமாயிருந்த ஸ்ரீதேவி இருக்குமிடத்தில் சர்வ ஐஸ்வரியங்களும், எல்லா மகிமைகளும் நிறைந்திருக்கும். சிற்றின்பமான சுகமே துக்கம்? அது மூதேவியாமென்றுமறிக. அதன் சொரூபமானது கோரமூட விர்த்தியாம். அதன் சுபாவீகமானது ராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சரம். ஈரிசை, அசூசை, டம்பம், தர்ப்பம், அகங்காரம் இதுகள் பதின்மூன்றுமாம். இந்தப்படி ராகாதிவிர்த்திகள் பதின்மூன்றும் கூட்டங்கூடியிருக்குமிடத்தில் எல்லாத் துன்பமும் நிறைந்திருக்குமிடம் என்று அறிக.

மனம். ஓ சுவாமி! இந்தப்படி இந்த உலகிடமெல்லாம், சுகதுக்கமிரண்டுமாய் இருப்பதென்றும் அருள் செய்தது சத்தியம். அதை அப்படியே உண்மையாக அடியேன் நம்பிக்கொண்டேன். ஆனல், இந்த உலகத்

தின்கண் சுகதுக்கமிரண்டும் இரண்டாகப் பகுத்தவர் யார் என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! சுகதுக்கமிரண்டுக்கும் காரணம் மனம் ஒன்றே யாம். வேறு இல்லையென்பது சத்தியம்.

மனம். ஓ சுவாமி! சர்வப்பிராணிகளும் தன்மனமே தானுப், ஏகமாய் இருந்தும் அது இரண்டுவிதமாய்த் தோற்றுவது சுபாவீகம். ஆனாலும், தன்னைத்தான் கொல்லும்படி நஞ்சைச் சாப்பிடுமா என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஏகமாய் ஆகாசம்போல் பரிபூரணமாயிருந்த மனம் ஒன்றுதான். சர்வப்பிராணிகளுக்கும் மனமொன்றென்றறிக வேறில்லை. ஆனாலும், அநேககுணகர்ம பேதங்களோடுகூடி அநேகநேகவிதமாயிருக்கும் சரீரம் அந்தந்தச் சரீரத்திலெல்லாம் நான் நான் என்கிற அநேகபாவனை யோடுகூடிய அபிமானம் தோற்றுவது சுபாவீகம். அந்த அபிமானத்துக்குக் காரணம், அனாதியாயுள்ள சேர்க்கைவாசனைப் பழக்கம் ஒன்றுதான். வேறில்லை. ஆகலால், தன்மனம் தன்வசமாகாமல் வெறிபிடித்தவரைப் போலேயும், நாய் கழுதைகளைப்போலேயும், குரங்குகளைப்போலேயும், நானாவிதமாயலைவது சுபாவீகம். ஆகலால், ஆசாவாசனையோடுகூடி அகங்காரமாயிருந்த தன்மனமே தனக்கு நஞ்சாமென்றுமறிக. அந்த நஞ்சான மனமே எமன், அந்த மனமே ஆத்மவஞ்சகி, அந்தமனமே தனக்குப் பகையாளி, அந்த மனமே கொலையாளி, அந்த மனமே கொடும்பாவி, அந்த மனமே தனக்குச் சத்துரு வேறில்லை என்பது சத்தியம்.

ஓ மனமே கேள்! ஒரு சமயம் நின்மனம் மெய்யான வஸ்துக்களைப் பொய்யாக எண்ணுவதும், பொய்யான வஸ்துக்களை மெய்யாக எண்ணுவதும் சுபாவீகம். ஆகலால், நின்மனம் இரண்டுண்டோ, நீயே நீர், நின்னை நீயேநினைத்துபாரு உன்சந்தேகந்தீரும். இந்தப்படி நின்மனம் ஏகமாயிருக்க பந்து சத்துரு பேதமாயும், சுகதுக்க மிரண்டுமுள்ளதாயும், தோன்றுவதற்குக் காரணம் நின்மனமொன்றேயாம். ஆகலால், நின்மனமிரண்டாய்ப் பகுத்தது நின்மனமொன்றேயாம் வேறில்லை. இதற்குச் சந்தேகம் வேண்டாம்.

மனம். ஓ சுவாமி! இந்தப்படியுள்ள மனதைக் கைவசமாக்கும் பொருட்டு மார்க்கமேதென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! ஆத்மாவிலிருந்தும் தோற்றப்பட்ட மாயாவாசனை யோடுகூடி நானென்கிற இந்த ஸ்தூலசரீரம், நானல்லவென்றறிந்தும், அந்தச் சரீரத்தைப் பகவானிடத்தில் சமார்ப்பணமாக்கி உபாசனைசெய்து பழகி வருவதானுல், அகங்காரம் அடியோடு நசிக்கும். அகங்காரம் நாச மானல் தன்மனம் தனகைவசப்படும. தன்மனம் தன்கைவசமானுல் அந்த மனதைத் தானே ஜெயிக்கலாம், மனதை ஓட்டுவது மனதின் ஆசை ஒன்று தான், ஆசைவிட்டால் மனம் கைவசமாகும், கைவசமானுல் மூலமாயையும் மூவுலகும் ஜெயிக்கலாம்.

மனம். ஓ சுவாமி ! இந்த உலகத்தின்கண் ஜனங்கள் அநேகவித மாய்ப் பகவானைக் கும்பிடுவார்கள். அதுகளில் எந்த விதமான பக்திசெய் தால் அகங்காரம் விட்டு மனோலயமடையுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள் ! அகங்காரத்தையடக்குவது யாராலும் அசாத்தியம். ஆனுலும், மூலமாயைக்கடந்து அகங்காரத்தை அடக்கி அருள்பெற்ற மஹான்களை அடுத்து நம்பி பக்தி விஸ்வாசத்துடன் பாதுகார்த்துப் பணி விடைசெய்யவும் வாக்கு மனக்காயம் மூன்றும் குருவின் திருவடியில் சமார்ச்சனைசெய்து பழகிவருவதானுல் அகங்காரம் அடியோடே நசிக்கும். சந்தேகம் வேண்டாம். ஏனென்றால், மாயைக்குள்ள அவகாசம் சரீரம், பிர்ம்மத்துக்குள்ள அவகாசம் ஜீவாத்மா, இதுகள் இந்தப்படி சத்தியமா யிருக்க இதுகளிரண்டும் நானல்ல. இந்தப்படி குருபக்தி விஸ்வாசங் கொண்டும், சுருதி யுக்தி அனுபவங்கொண்டுமெல்லாமல் அதைத்தவிர அநேகவிதமான சாஸ்திரங்களைப் பாடம்படித்தாலும், அநேகவிதமான யெக்ஞதானுதி தர்மங்களினுலும், சந்நியாசம், யோகம் சமாதிகளினுலும், அகங்காரம் சாந்தமாவது மகாகஷ்டம். எதைப் படித்தாலும், எத்தொழிலைச் செய்தாலும் அந்தக்கரணம் பரிசுத்தம்வரா என்பது நிச்சயம். அந்தக்கரணம் பரிசுத்தமானுல், அகங்காரம் அடியோடே நசிக்கும். அந்தக்கரணம் சுத்த மாக்கும்பொருட்டு உபாயம் முன்கூறியபடியுள்ள பரமசற்குரு பக்தி விஸ் வாசம் ஒன்றுகொண்டு அந்தக்கரணம் பரிசுத்தமாகுமென்பது சத்தியம்.

மனம். ஓ சுவாமி ! வசந்தகாலத்தில் நல்ல புஷ்பத்தின் பரிமளம் சந்தோஷமானதுபோல என்மனம் பரிசுத்தமானேன். நானென்கிற அகங்காரம் அடியோடே நசித்துவிட்டது. ஆனுலும் அடியேனுடைய சந்தேகமாவது, ஒரு புல்லைப்பிடுங்கினுல் மறுபடியும் அதனுடைய வேரி லிருந்தும் முளைத்துத் தழைத்து காடாய் வந்துவிடுவதுபோலே என்மனம் பரிசுத்தமாக்கி அகங்காரம் நசித்துவிட்டாலும் மூலவாசனை நசியாதிருக்கி

றது. அதை நாசமாக்கும்பொருட்டு நின்திருவடி கிருபையால் திருவாய் மலர்ந்தருள வேணுமென்றும், சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஆனந்த பாஷ்பம்பொழிய உள்ளன்புடன் அஞ்சலியஸ்தனாய் நின்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! அநாதியான மூலவாசனையை நாசமாக்குவது மகாப் பிரயாசம். ஆனாலும், ஞானக்கினியில் அதுசாம்பலாய் நாசமடையும், இதற்குச் சந்தேகம் வேண்டாம். ஆனாலும், மூலவாசனை எல்லாம் ஞானக்கினியில் தகிக்கும் என்கிற விஸ்வாசமிருந்தால் ஞானக்கினியில் தகிக்குமென்பது நிஜம். ஞானத்துக்கு முக்கியமானது குருபக்தி, குருபக்தி உண்டாவதற்கு முக்கியமானது ஞானம், ஆதலால், ஞானம் பக்தி இரண்டும் ஏகமாமென்றறிக.

ஓ மனமே கேள்! குரு நிச்சயமாவது ஞானம், ஞானம் இல்லாமல் குரு நிச்சயம் வராது. குரு நிச்சயமில்லாமல் ஞானமும் வராது. ஆனாலும், எல்லாம் கடவுளின் சொரூபமாகப் பார்த்தால் என்மனம் குரு நிச்சயம் வராதா? வரும். சந்தேகமில்லை. ஞானத்தை மறைப்பது அகங்காரம், அகங்காரம் நாசமானால் ஞானம் பிரகாசிக்கும். அகங்காரம் நாசமாகும் பொருட்டு உபாயம் எதுவென்றால், ஒரு ஞானதேசிகரையடுத்து தன்னறிவு பின்னிட்டுக் குருபக்தி விஸ்வாசம் முன்னிட்டுச் சேவித்துப் பழகி வருவதானால் அகங்காரம் அடியோடே நசிக்கும். அகங்காரம் நாசமானால் முக்குணங்களும், மும்மலங்களும் நீங்கி நிர்மலமாய் நிற்குண பரிபூரணானந்தமாயுள்ள ஸ்ரீ சற்குருவின் திருவருள் கிடைக்கும். ஸ்ரீ சற்குருவின் திருவருள் கிடைத்தாலும், நேதிநேதி மஹாவாக்கியங்களினாலும், அத்தியாரோப அபவாதத்தினாலும், அப்பியாச யோகத்தினாலும் எதார்த்தஞான மடையலாம். எதார்த்தஞானமடைந்தால் சர்வ கர்மமும் அதிலுள்ள மூலவாசனைகளும், அநேகவிதமான பாவங்களும், எல்லாம் ஞானக்கினியில் தகித்து நித்தியமாயும், பரிபூரணமாயும், உள்ள பரமானந்த பதமடையலாம் சந்தேகம் வேண்டாம். இது சத்தியம். இதைக்கேட்ட மனம் பரமானந்த சமுத்திரத்தில் மூழ்கித் தனுகரணாதிகளுங் குளிர்ந்து மேகத்தைக் கண்ட மயிலைப்போல மயிர்க்கூச்சலும், ஆனந்தப்பாஷ்பமும் பொழிய இருகையும் சிரசால் வணங்கிச் சாஷ்டாங்கமாய்த் தீர்க்க தண்டம்சமர்ப்பித்து உள்ளன்புடன் சஞ்சல சப்தத்தோடும் கிருதாஞ்சலியஸ்தனாய் நின்று கேட்கிறான்.

ஓ சுவாமி! அனாதியாய், ஆதியந்தமில்லாததாயுள்ள ஜனனமரணாதி சம்சார துன்பங்களுக்கு மூலகாரணமான சரீர அகங்காரம் இரைவனரு

ளால் இதோடே நாசமடைந்தது. அடியேனுடைய சித்தம் பரிசுத்த மாகித் தெளிவடைந்தேன். ஆனாலும், புல்லினால் கர்டாயிருந்ததைப் பிடுங்கிப் பரிசுத்தமாக்கினாலும் மறுபடியும் அதன் வேரிலிருந்தும் முளைத்துத் தழைத்தும் விருத்தியாய் முன்போல் என்மனம் பரிசுத்தமானாலும், மரத்தில் வித்துபோலவும், வித்தில் மரம்போலவும், அநேகநேக விதமாயும், அனுதியாயுமுள்ள மூலவாசனைகள் இருக்கிறது. அதுவும், நாசமாகாமற்போனால் முன்போல் சித்தம் அசுத்தமடைந்து சம்சாரமான காடேறி விருத்தியடையுமே. ஆதலால், அந்த மூலவாசனைகள் எல்லாம் அடியோடே வேரறுத்து நாசமாக்கும்பொருட்டு எப்படிக்கொத்த ஞானக்கினி அடையவேண்டுமென்றும், கிருபையால் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! கர்மமிருந்தமட்டும் கோபாதி துர்க்குணங்கள் இருக்கும். கோபாதி துர்க்குணங்கள் எல்லாம் அடியோடே தூரத்தள்ளிவிட்டு சித்தம் பரிசுத்தமானால் கர்மம் செய்தாலும் சம்மந்தமில்லை. ஆனாலும், மூலவாசனை நாசமாகாமல் இருக்கும். அதை நாசமாக்குவது மஹாப்ப்ரயாசம். ஏனென்றால் வாசனைகளுக்கு மூலகாரணம் குணங்கள் மூன்றுமாம். ஆதலால் குணம் மூன்றும் அதன் தொழில்களும், அடங்கிவிட்டால் அருள்பெற்று ஆனந்தமாயுள்ள ஆத்மக்ஞானமடையலாம். ஆத்மக்ஞானமடைந்தால் சர்வ கர்மங்களும் அதன் மூலவாசனையும் பாவ, மும் எல்லாம் அந்த ஞானக்கினியில் நசிக்கும்.

மனம். ஓ சுவாமி! சர்வவேதாந்த சித்தாந்தங்களுக்கும் முடிவானது நானுவிதமான விபகாரமுமற்று மவுனசமாதியை அடைவதே சிலாக்கியமென்றும் அறிந்தேன். ஆனால், இந்த உலகத்தின்கண் ஞானிகளனேகவிதமுண்டு. மவுனசமாதியும் அநேகவிதமுண்டு. அங்ஙனம் எப்படியெனில், ஒருவர் மகாத்தியாகியாய் வெகுகாலம் மவுனசமாதியை அடைந்தும் மறுபடியும் விபகாரதிசையை அடைவார்கள். ஆனால், இதுகளில் உண்மைக்ஞானிகள் மவுனசமாதியை அடைந்து பிர்ம்மானந்தமாய் இருப்பது எப்படியென்று திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! ஞானிகளும் பலவிதம், மவுனசமாதியும் பலவிதம். அங்ஙனம் எப்படியெனில், சாஸ்திரக்ஞானிகள் தன்னுடைய தத்துவங்களை அடக்கும் உபாயத்தைப் பாராமல் அதை அடிக்கடியும் எண்ணி எண்ணிப் பாடம் படிப்பார்கள். ஆத்ம யோகிகள் தன்னுடைய தத்துவங்களை அடக்கும் மார்க்கத்தில் இருப்பார்கள். ஆனாலும், உண்மைக்

ஞானிகளின் மவுனசமாதியின் இலட்சணமாவது சர்வசங்க பரித்தியாகம் ஒன்றேயாம். வேறில்லை. சர்வசங்க பரித்தியாகமென்பதற்கு உரை. மனதைக் கொல்லுவதாம். அதாவது மனதைச் சாந்தமாக்குவதாம் என்றுமறிக. மனம் செத்தால் சங்கமேது? அங்ஙனம், மனதைக்கொன்று மவுனசமாதி அடைவது எப்படியெனில், முதலாவது இந்திரியங்கள் பத்தும், அடக்கவேண்டும். இரண்டாவது கரணங்கள் நான்கும் அடக்க வேண்டும். இந்திரியங்களாவது, காதுங் கேள்வியும் செத்து, தோலும் பரிசமும் செத்து, கண்ணும் பார்வையும் செத்து, மூக்கும் நாற்றமும் செத்து, நாக்கும் இரசமும் செத்து, வாக்கும் வசனமும் செத்து, பாதமும் கவனமும் செத்து, கையும் தானமும் செத்து, பாயுரும் விசர்ச்சனையும் செத்து, உபஸ்தமும் ஆனந்தமும் செத்து, மனமும் சங்கற்பமும் செத்து, புத்தியும் திருவும் செத்து சித்தமும் சலனமும் செத்து, அகங்காரமும் அபிமானமும் செத்து, குணம் மூன்றும் செத்து, பந்தமோக்ஷபேதம் செத்து, அங்கசங்கமோகம்செத்து, அனுதியான மாயாவாசனையும்செத்து, இன்பதுன்பமிரண்டும் செத்து, இகபரபோகமும் செத்து, பசி, தாகம், சீதளம்,உஷ்ணம்,இதம், அகிதம்,விருப்பம், வெறுப்பம், சுத்தம், அசுத்தம், பேதம், அபேதம், சத்துரு, மித்துரு, ஜனனம், மரணம், புண்ணியம், பாபம், சுகம், துக்கம், நரகம், சுவர்க்கம், வர்ணம், ஆசிரமம், மானம், அபிமானம், பயம், வெட்கம், பிரியம், அப்பிரியம், நான், நீ, எனது, உனது, இதுகள் எல்லாம் செத்து, இரவும் பகலும் அற்று, மூன்று அவஸ்தையும் விட்டு, சமமாய் ஆகாசம்போல் பரிபூரணமான துரியநிலையை அடைந்து, நித்தியமாயும், நிர்வாணமாயும், விதேகானந்தமாயும் உள்ள நிற்விகர்ப்ப சமாதியை அடைந்தும், துரியாதீதமாய் இருப்பதே உண்மைஞானிகளுடைய மவுன சமாதி என்றும் அறிக. இப்படிக்கொத்த சற்குருவின் திருவடிக்கி மனசா வாசா காயால் அனவரதம் நமஸ்காரம். இப்படிக்கொத்த மஹான்கள் மவுன சமாதியைவிட்டு விபகாரநிசை அடைந்தாலும் போகத்தை அனுபவித்தாலும் மலமற்ற ஆகாசம்போல் பரிபூரணமாய்ப் பற்றற்று எங்கும் பிரகாசமாய் இருப்பார்கள்.

இதைக்கேட்ட மனம் நித்தியானந்தமாயுள்ள பெரும் வெள்ளத்தில் மூழ்கி, அநேக தீர்க்கதண்டமிட்டு அஞ்சலியஸ்தனுய் நின்று கேட்கிறுன்.

ஓ சுவாமி நின்திருவடி திருவாய்மலர்ந்தருளிய தத்துவமசி மஹாவாக்கியமென்றும் சாரோபதேசமான சத்தியப் பிரமாணங்களைக் கேட்டு அடியேனுடைய சந்தேகம் எல்லாம் தீர்ந்து தெளிவடைந்தேன். ஆனுலும் தேவரீர் முன் கூறியபடி ஜகஜீவபரம் இவைகள் மூன்றும் பரமாத்மா

வில்ஐக்கியமாய் அந்த ஐக்கியமுந்தாண்டி துரியசிலையுங்கடந்து துரியாதீத மாயுள்ள பரமபதம் அடைந்த மஹாத்துமாக்களின் சரீரம் வியோகமானால் சமாதிவைத்துப் பூசைசெய்தால் அதன் பயனுவது என்ன. அந்த ஞானி கட்கோ அதுமல்ல மற்ற உலகத்தாற்கோ என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்! இந்த உலகத்தின்கண் பூமியிலுள்ள மனிதர்களின் ஒருவராலும் சரீரம் இகபரத்திலுள்ள சுகத்தில் ஆசைவிட்டு மோக்ஷம் அடைந்தால் அவாள்தான் உலகத்தில் பெரியவாள் என்றும், வேதாகம புராண இதிகாசங்களிலும் மஹத்துக்களும் கூறியிருக்கிறது. அப்படிக் கொத்த மகத்துக்கள் மோக்ஷம் அடைந்த சன்மார்க்கத்தை மறவாமல் கற்பககாலபரியந்தம் உலகத்தில் சத்கீர்த்தி விளங்கும் பொருட்டாயும் பாவம்போக்கி பரிசுத்தமாகும் பொருட்டு பெரியவாளை சமாதியில்வைத்து பூசை செய்யவேண்டியது அவசியம். அப்படிச் செய்யாமல் போனால் அந்த ஞானிகளுக்குள்ள பிர்ம்மானந்தபதவி அணுவளவும் குறைவில்லை என்பது சத்தியம். ஆனாலும் முன்னோர்களான சாதுக்களின் சமாதி நினைப்பதும், அவர்களுடைய சரித்திரங்களைப் படிப்பதும், இன்னுமுள்ள சாதுக்களின் பாதபூசைச் செய்வதும், பஞ்சதானங்களைச் செய்வதும், மகோத்ஸவங்களை நடத்துவதும் உலகத்திற்கு மெத்தவும் க்ஷேமம்.

ஓ மனமே கேள்! இந்திரியங்களும் மனதும் அடக்கி அருள்பெற்று ஆத்மாவில் ஐக்கியமாய் கண்மூடிமவுனியாய் சமாதியடைவதே மெய்யான அத்வீதபக்ஷம்.

ஓ மனமே கேள்! பூசையாவதின் பிரயோசனம் மனசங்கல்பமடக் கும்பொருட்டே அல்லாமல் வேறில்லை. மனசங்கல்பம் அற்று உபசாந்த மானால் அந்த ஞானிகளுக்குச் சமாதியில் பிரயோசனம் இல்லை என்பது நிச்சயம். அவாள் எங்கும் பரிபூரணானந்தம் என்று அறிக. ஆனாலும் அப்படிக்கொத்த எதார்த்தக்ஞானிகள் இந்த உலகத்தின்கண் கோடியில் ஒருவர் இருந்தாலும் இருக்கும். இதைத்தவிர சரியை, கிரியை, யோகம், இவைகளில் இருந்தும் சரீரம் வியோகமானால் அந்த ஜீவர்களுக்கு சூக்ஷ்ம சரீரம் உண்டு. அந்த சூக்ஷ்மசரீரத்துக்கும் ஸ்தூலசரீரத்தைப் போல் பசி தாகாதி சுகதுக்கங்களும் உண்டு. ஆதலால் அதுகளுக்குப் பூசைசெய்ய வேண்டியது அவசியம். அதாவது சந்நியாசி முதலான சாதுக்களைச் சமாதிவைத்து ஈஸ்வரபக்தியுடன் பிதுர்தேவாதி திருமூர்த்திகளை உத்தே சித்தும் மஹா ஞானிகளின் பாதபூசை செய்வதாம் சமாதிபூசை என்றும் குருபூசை என்றும் அறிக. ஆதலால் சரியை, கிரியை, யோகம், ஞானம் இதுகளிலிருந்தும் ஸ்தூலசரீரம் விட்டபின் அதிகாரத்துக்குத் தகுந்தபடி

சாலோக சாமீப சாரூப்ய சாயுஜ்யம் இந்தப்படி நாலுமுக்தி உண்டு. ஆத லால் முன்கூறினபடி சமாதிபூசை செய்தவாளும் அந்த ஸ்தானம் அடை யலாம் என்பதற்கு சந்தேகம் வேண்டாம். ஆதலால் பெரியவாள் சமாதி பூசையாவது எல்லாவற்றிலும் சிறந்தது. அதாவது கருமமுடிவான தந்திர மாம். அது, ஜன்மசாபல்யமாம் என்று அறிக.

ஆதலால் சமாதி பூசை செய்வது உலகத்துக்கு மெத்தவும் நன்று. நன்று. இதனல் தர்மார்த்தகாமமோக்ஷ நாலுமடையலாமென்பதுசத்தியம். இதனல் எல்லாமூர்த்திகளும் பிதுர்தேவதாதிகளும் திருப்தியடையும். எல் லாப்பலனுமடையலாம். ஒரு பெரியவாளைச் சமாதிவைத்துப் பூசித்தால் அது சராசரத்துக்கும் பூசையாம். அது பிர்மபூசையாமென்றுமறிக.

ஓ மனமே இன்னுங்கேள்! குருபூசையானது எல்லா யெக்கியங் களிலும் சிறந்ததான பிர்மயெக்கியமென்றும் கர்ம முடிவானதென்றும் ஜன்ம சாபல்யமாமென்றும் வேதங்களிலும் மஹத்துக்களும் கூறப்பட் டது. சத்தியம். ஆதலால் அதை உண்மையாக நம்பவேணும். குருவா னவர் யாரென்றல் நான்கு வேதங்களுக்கும் மூன்றுகுண மூர்த்திகளுக் கும் அதீதமாயுள்ள நிர்க்குண மூர்ந்தியாமென்றும் அறிவதே பரோக்ஷக் ஞானமென்றும் அருட்ஞானமென்றும் இதனல் எதார்த்தக்ஞானமடை யலாமென்றும் இதைத்தவிர சாஸ்திரக்ஞானிகள் இதை நம்பமாட்டார். எனென்றல் ஸ்ரீ சற்குருவின் திருவருள் இல்லாமல் ஞானநூல்களைப் பார்த்து சாஸ்திரக்ஞானமடைந்ததாதலால் அவர்களுக்கெல்லாம் குரு மூன்றுகுண மூர்த்திகளாமென்றும் அந்த மூன்றுகுண மூர்த்திகளையும் குருவாகத் தான் கண்டதுபோல் கொண்டாடிப்பேசித்திரிவார்கள். ஞானி கள் இதைப்பார்க்கில் திருமூர்த்திகளும் குணதத்துவங்களாமென்றும் அறிவார்கள். சர்வஜீவர்களுக்கும் குருவானது பரமாத்மா. அது குண ரகிதமாயும், நாசரகிதமாயுமுள்ள பரமாத்மா ஒன்றேயாம். வேறில்லை என்பது நிச்சயம். அந்தப்பரமாத்மாவினுடைய அம்சமானது ஜீவாத்மா. அதனல் ஜீவாத்மாக்களெல்லாம் பரமாத்மாவுக்கு சிஷ்யர்களாமென்றும் அறிக. ஆதலால் ஜீவர்களுக்கெல்லாம் பிதாவாயும் குருவாயுமுள்ள பர மாத்மாவைப்பார்ப்பதுதான் ஐக்கியமென்றும் மோக்ஷமென்றும் மஹான் களின் சம்மதம். அங்ஙனம் எப்படியெனில், அனுதிகாலமாய்ப் பிதாவை விட்டு வெகுதூரம்போய்வந்த புத்திரன் பிதாவைப்பார்த்தான். அந்தப் பிதாவுக்கு மகனிலுள்ள சந்தோஷம்போலே அனுதிகாலமாய் பரமாத்மா விலிருந்து பிரிந்த ஜீவாத்மா பரமாத்மாவினை பார்க்கும்போது அட்சணம் ஐக்கியமாம் என்பது நிச்சயம். அங்ஙனம் ஐக்கியமானபின் ஜீவனென்

பதும் பொய். ஐக்கியமென்பதும் பொய். குரு வென்பதும் பொய். சிஷ்யனென்பதும் பொய். நானொருவன் மெய் யென்பதும் பொய். இந்தப்படி மெய் பொய் இரண்டும் மனோலயத்தின்கண் பரமானந்த பரிபூரண பரமஜோதியாய் விளங்கி யேகமாய் என்றைக்கும் உள்ளது அது தானென்றும் அறிவதே மெய்யறி விளக்கமென்றும் மஹான்கள் சம்மதம் சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!!

ஓ மனமே கேள்! இந்தக்கலியுகத்தில் மனுஷியர்களுக்கு கர்மத்தினால் கடைத்தேரும்பொருட்டு மார்க்கமில்லை. ஏனென்றால் தாமசகுண மதிகமாகையால் எக்ஞாதிகர்மங்களையெல்லாம் விலக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் எல்லா எக்கியங்களிலும் சிறந்தது பிர்மயெக்கியமாமென்றும், அது சாதுக்களில் பாதபூசை செய்வதே பிரதானமென்றுமறிக.

ஓ மனமே வாரும். நான் சொல்வதைக்கேளும். உனக்கு நான் முன் கூறிய மெய்யறிவிளக்கத்தின் சாரமானது சுருக்கமாய் இன்னமுனக்குச் சொல்லுகிறேன் கேளும். இந்த உலகத்தின்கண் சராசர குருவாயும் ஸ்ரீ மஹானுபாவராயுமிருந்த ஸ்ரீமான் ஆதி சங்கராச்சாரியஸ்வாமிகளவர்களால் இயற்றியதின் சாரமான ஒரு ஸ்லோகம் அல்லது இரண்டு மூன்று ஸ்லோகம் உனக்கு நான் சொல்லுகிறேன். அதை நீ உண்மையாக நம்பி இருகாதினாலேயும் கேட்டு சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் நெஞ்சிலே இறக்கி அங்கே அசையாமல் நிலையிலே நிறுத்தி நிர்மலமாய்ப்பாரும் அப்போது உன்னுடைய சந்தேகமெல்லாந்தீரும். ஜனனமரணாதி துன்பமும் நீங்கும் நிர்மலமாய்ப் பிர்மானந்தபதமடையலாம். அதாவது

ஞானநிமித்தம்குருவுபதேசம்
கலகநிமித்தங்கடோறவாக்யம்
மாணநிமித்தம்குணவிபரீதம்
உதரநிமித்தம்வெகுகிருதவேஷம்
பஜகோவிந்தம்பஜகோவிந்தம்
கோவிந்தம்பஜமூடமதே. (1)

புனரபிஜனனம்புனரபிமரணம்
புனரபிஜனனிஜெடரேஜயணம்
இஹஸம்ஸாரேவெகுதுஷ்தாரே
க்ருபையாபாரேபாஹிமுராரே
பஜகோவிந்தம்பஜகோவிந்தம்
கோவிந்தம்பஜமூடமதே. (2)

சஸ்ஸங்கத்வேநிஸ்ஸங்கத்வம்
நிர்ஸங்கத்வேநிர்மோஹத்வம்
நிர்மோஹத்வேநிர்ஜலதத்வம்
நிர்ஜலதத்வேஜீவன்முக்தி
பஜகோவிந்தம்பஜகோவிந்தம்
கோவிந்தம்பஜமூடமதே. (1)

அதாவது உலகமெல்லாம் மனோபாவனைதான். மனோபாவனையற்றால் மனமுண்டா? இல்லை. மனமில்லாவிட்டால் ஜெகத்துண்டா? அதுவும் பொய். ஜெகத்துமில்லாவிட்டால் குணமுண்டா? குணமூன்றுமில்லாவிட்டால் பந்தமோக்ஷமுண்டா? பந்தமோக்ஷமிரண்டுமில்லாவிட்டால் ஜன்மசாபல்யமாகும். அதுவே நித்திய கைவல்யமென்றும் பரமபதமென்றும் பிரம்மானந்த பதவியென்றும் மஹாத்துமாக்களும் சுருதி வேதாதி புராண இதிகாசங்களும் கூறப்பட்டதின் முக்கிய தாற்பரியம். இதுவே சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!! இதை நம்புமானால் உனக்கினிமேலும் நான் உபதேசம்பண்ணுகிறேன். அதை நீ உண்மையாய் நம்பி என்னிடத்தில் அன்பாய்க் காதுகொடுத்துக் கேளும். சரீரமே நானென்கிறபுத்தி இந்த உலகத்தின்கண் சர்வப்பிராணிகளுக்கு மிருக்கிறதுசகஜம். இந்தப்பாவனையானது மகாமோஹ மாதாவான அவித்தையாம் என்றும் நிச்சயமாய் நீ அறி. இந்த உலகசுபாவீகமானது சுத்தப் பொய்பாயும் பரிசுத்த மெய்யாயுமிருக்குமென்பது சத்தியம். அதில் பொய்யை நீக்கி மெய்யறிவு வருவது மகாப்பிரயாசம். ஆனாலும் மெய்யறிவும் பொய்யறிவும் இவை இரண்டிற்குங்காரணம் மனம் ஒன்றுதான். மனமென்பது மாயை. அதானது அனேக சங்கற்பவிகற்பத்தோடு கூடியதே மனதின் சொரூபம். சங்கற்பவிகற்பம் விட்டால் மெய்யும் பொய். பொய்யும் பொய். மெய்பொய் இரண்டுமில்லாவிட்டால் மனமேது, ஜகத்தேது, ஜடமேது, பந்தமோக்ஷமேது, ஜனனமரணாதி துன்பமேது ஒன்றுமே காணவில்லை.

ஓ மனமே கேள்! இந்தவுலகத்தின்கண் பிராணிகளுடைய சுகம் ஸ்திரீபோகாதி விடையங்களும் சமுசாரங்களும் சொர்ப்பனசமானமாம் என்றுமறிக. இந்தத்தேகமோ நித்தியமல்ல. அநித்தியம். அதானது நீர்க்குமிழிக்குச்சமானம். இந்தத்தேகம் ஜனனமெடுத்தகாலத்திலே இதற்கு நாசமுண்டு. இதைப் பிராணிகளுக்குத் தெரியாமல் மூலமாயைக்குள்ளேயிருப்பார்கள். அந்த மூலமாயையிலிருந்தும் சாந்தகோரமூடமாய் மூன்றுகுணந்தோன்றியது. அதுவே பிரத்தியக்ஷமாயையின் சொரூபம். இதுவே

மூன்றுலகம். இந்த மூன்று குணபேதமே ஜனனமரணாதி இன்பதுன்பங்களுக்கும் பந்தமோக்ஷத்திற்கும் காரணம் என்றும் மஹாத்துமாக்களுடைய சம்மதம், சத்தியம். இந்த உலகமானது அவித்தையின் சொரூபமாம் என்று அறிக. அங்ஙனம் உலகம் உற்பத்தியானவுடன் காலமாய் இருக்கிற ஒரு (அஹி) நம்மைப் பிடித்துக்கொண்டது (அஹி) என்பதற்கு அர்த்தம் ஒரு சர்ப்பம். சர்ப்பத்திலும் பெரிதானது மலைப்பாம்பு. அந்தக் காலமான மலைப்பாம்பின் வாயிலே சர்வபூதங்களும் பிறந்தது. அதுவே காலாந்தத்தில் சர்வத்தையும் சாப்பிடும். அங்ஙனம் எப்படியெனில் ஒரு மாதாவின் உதரத்தில் நாம் பிறந்த சமயமுதல் நம்மைக் கொல்லும்படியான எமனும் நம்மோடு கூடப்பிறந்தது. அதுவே நம்மைப் பாதுகாத்துப் பலநாளிருந்தாலும் ஒருநாள் நம்மைச் சாப்பிடும் என்பதற்குச் சந்தேகம் வேண்டாம். அந்த மிருத்துவின் அவசானகாலமான மரணம்வரையிலும் சர்வப்பிராணிகளுக்கும் சரீரபயமும் எமபயமும் இருக்கும். அதாவது மாயாபுத்தியாகிய ஜனங்களுக்கு நெடுநாள்வரை ஜீவித்து இருந்தாலும் இந்த அவஸ்தை தெரியாது. அதானது பிறந்த காலமுதல் சரீரம் நாசமாய்ப்போகும் என்கிற அவஸ்தையை இன்னசமயம் என்று தெரிந்தும், தெரியாமல் அகங்காரத்தினாலும் அபிமானத்தினாலும் அஞ்ஞான விபரீத சந்தேகத்தினாலும் மறந்துவிட்டது. சரி, அங்ஙனம் எப்படியெனில் மாயாமோகத்தை அடைந்த பிராணிகளுக்கெல்லாம் இதுவே பகலென்றும், இதுவே இரவுயென்றும், இனிமேல் பகல் வருமென்றும் இந்தப்படி நெடுநாளிருக்குமென்றும் சிந்தித்துக்கொண்டிருந்த பேர்களுக்கு கடிகாரம் போல் மின்னிட்டு மின்னிட்டுத் தன்னுடைய ஆயுசுக்கம்மியாய்க் கடைசி நாசமாய்ப்போகும் என்பது தெரியாது. ஏனென்றால் மாயாமோகமான சமுசாரசாகரத்தில் ஆழ்ந்து கிடப்பவர்களுக்கு இந்தஅவஸ்தை தெரியாது. அங்ஙனம் எப்பெடியெனில், ஒரு பாம்பானது ஒருதேரையைப் பிடித்தது போல காலமான சர்ப்பம் ஜனனம் எடுத்தகாலமுதல் காலின் பெருவிரல் நுனியிலே பிடித்துக்கொண்டது. அந்தப்படி பிராயகாலம் பரியந்தம் பாம்பின்வாய்த் தேரையைப்போல் நாமிருக்கிறோம் என்றும் அஞ்ஞானிகளுக்குத் தெரியாது. அந்தப் பிராயகாலத்திலுள்ள போகத்தை அனுபவித்தும் தன்னுடைய ஆயுசுவீணாய்ப் போகிறது ஒருவருக்கும் தெரியாது. பிராயகாலமான சமயம் அந்தத் தேரையின் உடலை அந்தப்பாம்புவாயிலே அடக்கிக்கொண்டது. அந்தச்சமயம் அந்தத் தேரையானது மரணபயத்தினால் வாயைத்திறந்து (ஆ ஆ) என்று கற்றினது. அதேசமயம் தெய்வகதியால் ஒரு ஈயானது தானே பறந்துவந்து அந்தத்தேரையின் வாயிற்குட் பட்டது. அந்தச்சமயம் அந்தத்தேரையானது வாயை முறுக்கி இந்தச்சமயமிது நல்லசுகமென என்றெண்ணிச் சாப்பிட்டது.

இதுபோல் மிருத்துவிற்கு இறைபாய்ப் பிறந்த மானிடர்களும் நெடுநாள்வரை ஜீவித்து இருந்தாலும் மரணமடையும் என்பதற்குச் சந்தேகம் வேண்டாம். அந்த பாம்பின் வாயிற்பட்ட தேரையைப்போல் மிருத்தியுவான எமனுடைய வாயிற்குள்ளே பட்டிருந்தும் வெகுகாலம் போனாலும் அற்பமாயும் அனித்தியமாயுமுள்ள ஸ்திரீபோகாதி விடயசுகங்களின் இச்சை கொள்வது சுபாவீகம். இந்தப்படி அற்பபுத்திகளாய் சம்சார சுகத்தையே அடைவார்கள். ஆதலால் தேகாபிமானத்தையும் சம்சாரத்தையும் தூரத்தள்ளிவிடுவதே யோகம். குருவாக்கியப் பிரமாணங்களினால் சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் ஜீவாத்மாவினை அந்தக் குருவாம் பரமாத்மாவிலேக்யம் செய்து சிவசத்தி இரண்டுமோய் இரண்டறக்கலந்து ஏகமாய்ப் பரமானந்த பரிபூரணமாய் இருப்பதே ஞானம். இதுவே முன்கூறிய மெய்யறிவு விளக்கத்தின் சுருக்கமான தாற்பரியம்.

ஓ மனமே கேள்! என்னிடத்தில் என்கிட்டேயிருந்து நீ என்னைப் பிரியாமல் பக்திவிஸ்வாசத்துடன்கேளும். தத்துவமசி மஹாவாக்கியத்தின் சாரமான பொருளை உனக்கு நான் சொல்லுகிறேன் கேட்பாயாக. நீ நான் என்கிற இருபாவனைக்கு நடுவிலே பரமாத்மா ஏகமாயிருக்கிறது. அதுவே பரமரகசியம். ஆனாலும், நான் நீ என்கிற இரண்டு மற்ற இடத்திலே பரமாத்மா பரிபூரண பரபரமானந்தமாயும் சத்யமாயும் நித்தியமாயும் சச்சிதானந்தமாயும் என்றைக்குமுள்ள பொருளாயுமுள்ளதென்றும் அறிவதே பிர்ம்மக்ஞானம் என்று அறிக. இதை நான் உனக்குச் சொன்ன வார்த்தை உண்மையாக என்னை நீ நம்பி நின் இரண்டுகையும் சிரசால் வணங்கி கைத்தாளம் போட்டுச்கொண்டு மஹாஜனங்கள் கூடிய சபையில் மத்தியத்தில் நின்றும் உபந்நியாசங்களைச் செய்யலாம். இதனால் நீயும் நின்னையடுத்த பேர்களும் நின்வம்சத்தில் இருபத்தோரு தலைமுறையுள்ள பிதுர்க்களும் நீயும் பரிசுத்தமாய்ப் பரமானந்தபதம் அடையலாம்.

ஓ மனமே! என்கிட்டவா இன்னுங்கேள். நீ எனக்கு அன்புள்ள மனைவியைப்போல் இஷ்டசகியாயும் பந்துவாயும் இருப்பதாதலால்உனக்கு நான் பரமரகசியமாயும் ஏகாந்தமாயும் பிரம்மானந்தமாயுமுள்ள வேதாந்த சாரத்தை உபதேசிக்கிறேன். அதானது, மானிடப்பிறவியில் ஜன்மசாபல்யமாவது மோக்ஷம். மோக்ஷம் என்பதின் தாற்பரியம் ஸ்தூலசூக்ஷ்ம காரணம் என்றும் மூன்று சரீரம். இந்த மூன்று சரீரத்தையும் விட்டு மனோலயமும், வாசனக்ஷயமும், தத்துவபோதமும் அடைவதுதான் மோக்ஷம். அங்ஙனம், அநாதியாயுள்ள கருமத்தின் மூலவாசனையும் மனதும் நாசமாக்கித் தத்வபோதம் வந்தால் முன்கூறிய மூன்று சரீரமும் கிடை

யாது. இந்தப்படி மூன்று சரீரமில்லாவிட்டால் உண்மைஞானம் விளங்கும். உண்மைநிலை அடைவதே மோக்ஷம். அங்ஙனம் யாதெனில் ஸ்ரீ சற்குருவின் திருவருட்பிரசாதத்தினால் அறியவேண்டும். சற்குருவானது பரமாத்மா. பரமாத்மாவின் ஸ்வரூபமானது பரமானந்தம். அங்ஙனம் பரமானந்தமாயும் ஏகமாயும் பரஞ்சோதியாயும் தீக்கொள்ளி போலவும் இருக்கும். அந்த அகண்டமான தீக்கொள்ளியிலிருந்தும் மாயாக்காற்றினால் மூன்று குணபேதமாக அநேகநேகம் பொரிகள் பறந்தன. அந்தப் பொரிகள்தான் பலவித கருவிகளான ஜீவர்கள். ஆனாலும் முன்கூறிய தீக்கொள்ளியிலிருந்தும் பறக்கப்பட்டத் தீப்பொரிகள் எல்லாம் விருத்திக்ஷயமடைந்து மனோலயம் வரும்நாள் வரைக்கும் நானாவிதமாய் அலைவதே சுபாவீகம். அங்ஙனம், தீக்கொள்ளியிலிருந்தும் மாயாக்காற்றினால் பறந்துபோன பொரிகளை எல்லாம் அந்தத்தீக்கொள்ளி தன்னிடம் சேரும்படி கூப்பிட்டால் வருமா? வராது. அதுபோல் அகண்டபரிபூரணமாயும் பரமஜோதியாயும் சச்சிதானந்த ஸ்வரூபமாயும் ஏகமாயுமுள்ள பரமாத்மாவிலிருந்தும் பிறந்த ஜீவர்கள் எல்லாம் ஜீவகாருண்யமுடைய பகவான் தன்னை அடையும்பொருட்டு வாவா என்று கூப்பிட்டாலும் வருமா? வராது. ஆனாலும் ஜீவர்களிற் சிலர் பூர்வபுண்ணிய விசேஷத்தினாலும் தெய்வவசால் நிவர்த்திக்கிச்சை யுடையவராய் சமதமாதி நான்கு சாதனங்களுமடைந்து ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற்றும் மனோலயம்வந்து தத்வஞானத்தை அடைந்தால் அந்த தத்வக்ஞானம் என்கிற ஞானக்கினியில் அநாதியான கருமத்தின் மூலவாசனையெல்லாம் சுட்டுச் சாம்பலாக்கிப்போட்டு ஜன்மசாபல்யமடைவார்கள். அங்ஙனம் முன்கூறிய கருமவாசனையும் மனோலயமும் அடையும் மார்க்கம் யாதெனில் இந்தக்காயமானது விளக்கைப்போலவும் கருமமானதை நல்ல தைலத்தைப்போலவும் மனமானது அதை பரிசுத்தமுடைய வத்தியைப்போலவும் காண்க. அங்ஙனம் காயமான விளக்கில் சற்கருமமான தைலம் நிறைத்துப் பரிசுத்தமாய் உள்ள மனோவத்தியை அன்பாய் அதிற்போட்டு ஞானமாயுள்ள தீபத்தையேற்றினால் கருமமான தைலம் தானே நசிக்கும். அங்ஙனம் கருமமான தைலம் நாசம் அடைந்தால் மனோவத்தியும் அந்த ஞானதீபத்தால் எறிந்து சாம்பலாய் அரைநிமிஷத்திற்குள் நாசமடையும். அப்போது ஞானமென்கிற தீபமும் அடங்கியிருக்கும். அங்ஙனம் காயமாம் விளக்கை நன்றாய்விளக்கி அதில் நிஷ்காம சற்கருமமான தைலத்தையும் நிறையஊற்றி அதில் நின்பரிசுத்தமுடைய மனதைப்போட்டு ஞானதீபமேற்றினால் ஞானப்பிரகாசம் விளங்கும். ஞானப்பிரகாசம் அதிகமானால் முதலாவது கருமவாசனை நசிக்கும். கருமம் நசித்தால் மனோலயம் தானேயடையும். அங்ஙனம் மனோவத்தியைப் பெரிதாக்கிப் போட்டால் கருமதைலம் எவ்வளவு இருந்தாலும்

எறிந்துவிடும் என்பதே இதன் தாத்பரியம். அங்ஙனம் கருமமான தைல மும் இல்லாவிட்டால் ஞானம் என்ற தீபமும் சூன்யம். அங்ஙனம் வந்த வார் கருமமான தைலம் எவ்வளவு ஜாஸ்தியிருந்தாலும் மனமான வத்தி யைப் பரிசுத்தமாக்கிப் பெருங்கணமாய்ப் போட்டால் கரும தைலம் ஞானக்கினியால் அடங்கிவிடும். அங்ஙனம் கருமதைலம் இல்லாவிட்டால் மனோவத்தியும் ஞானத்தீயினால் உடனே நசிக்கும். அங்ஙனம் எல்லாம் ஞானக்கினியால் நாசமானால் ஞானக்கினியும் இல்லை.

ஓ மனமே கேள்! கருமமும் மனதும் இல்லாவிட்டால் காயமே நான் என்கிறபாவனை இருக்குமா? இராது. அங்ஙனம் காயமும் கரும மும் மனதும் நாசமானால் நானே ஞானியென்கிற பாவனையும் நாமரூபாதி களும் கிடையாது. எல்லாம் பிர்ம்மமயம் ஏகம். இதுவே நிற்விகர்ப்ப சமாதி என்றும் மெய்யறிவு விளக்கமென்றும் உண்மையான ஞானநிலை என்றும் உபநிஷத்தாதி வேதாந்த சாஸ்திரங்களும் மஹத்துக்களும் கூறி யது. சத்தியம். சத்தியம்.

### ஸ்ரீ அகஸ்தியபகவான் கூறியது.

---

தாமென்றஞானத்தின்பலனைக்கேளு
தலைகீழாழ்பஞ்சாக்கினியிடையில்நின்று
கோமென்றகோடிகற்பம்தவஞ்செய்தபலமும்
கூறஸ்வமேதியாகம்நூறுகோடி
தேமென்றுசெய்பலமும்மூவருக்கும்
செகத்தினிலோர்நூறுகற்பமர்ச்சித்தபலமும்
மூமென்றஞானிநிஷ்டைகணஞ்செய்தபலத்துக்கு
ஒவ்வாதுயென்றுமறையுறைக்குந்தானே. (1)

கேளப்பாகருடன்முன்புசர்ப்பந்தானும்
கிட்டவுந்தானில்லாதகெடியைப்போலும்
மாளப்பாயிருள்தானும்சூரியன்முன்நிற்க
மாட்டாதுஒழிப்போம்வரிசைபோலுங்
கேளப்பாபஞ்சதுதான்வடவையனல்முன்பு
கூடியதுநில்லாதுகுறியைப்போலும்
ஆளப்பாவெகுகோடிபாவஞ்செய்தோன்
அருள்ஞானிதனைக்காணிலகன்றுபோமே. (2)

போகாமல்படைத்தவனேஞானிபாதம்
பூசிப்பன்சிரசில்வைத்துபுவனங்காத்தோன்
தாகமாய்ஞானியவன்நினைத்ததெல்லாம்
தலையினலேசுமந்துதருவன்பாரு
ஏகமாய்புவனமெல்லாம்யெறித்தோன் தானும்
இவன்பின்னே திரிந்திடுவானிவனைக்கார்க்க
சாகா தவானவர்க்கும்மனிதருக்கும்ஞானி
சான்பணியக்கிடைக்குமோசெகத்திற்றனே. (3)

தானென்றஞானிக்கோர்பிடி தான்பிச்சை
தனையளித்தார் தங்களுக்குபலத்தைக்கேளு
கோனென்றஅசுரமதுநூறுகோடி
கோபுரந்தான்கோடிசெய்தபலத்துக்குமதிகம்
ஊனென்ற நால்வேதஞ்சாங்கமாக
வோதியதோர் அந்தணர்கள்கோடிபேர்க்கு
தேனென்றஅன்னமிட்டபலத்துக்குமதிகம்
சித்தாந்தம்வேதாந்தம்செப்பும்பாரே. (4)

செப்புமப்பாஞானியவனிருந்தவிடமெல்லாம்
செம்பொன்மணிகைலாயம்வைகுந்தமென்பார்
ஒப்பிலவன் திரிவதெல்லாம்உலகத்துக்கிரட்சை
ஒங்கிலவன்பாதங்கள்பட்டவிடமெல்லாம்
தப்பில்லாயாகாதிசெய்தவிடமாகும்
தானவனைக்காணசிவதரிசனமுமாகும்
அப்பாகேள் அவன்வார்த்தைமந்திரமுமாகும்
அதைக்கேட்டால்வேதமென்பார் அறிவுள்ளோரே. (5)

இதைக்கேட்ட மனம் பரிசுத்தமாய் அறிவிலடங்கி அறிவும் மெய்யறிவாய் பரிபூரணமாம் பரமாத்மாவில் ஐக்கியமாய் ஆனந்தாதீதமாய் நிரதிசயமாய் விளங்க.

ஓம்நமப்பிரணவார்த்தாய சுத்தக்ஞானைகமூர்த்தயே
நிர்மலாயப்பிரசாந்தாய தக்ஷிணாமூர்த்தயேநம:
நிதியேசர்வவித்யானும் பிஷஜேபவரோகிணும்
குருவேசர்வலோகானும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயேநம:

ஸ்ரீ சற்குருவே நம:

மெய்யறி விளக்கம் பரிபூரணம்.

உ
ஸ்ரீசற்குருவேநம:

ஸ்ரீசற்குரு சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்ட
புத்தகங்களின் விபரம்.

---

| | | |
|---|---|---|
| மெய்யறி விளக்கம். ... | ரூ. | 0-12-0 |
| அறிவு விளக்கம். ... | ரூ. | 0-10-0 |
| ஆத்மயோக ஸங்ரஹம். ... | ரூ. | 0-6-0 |
| ஹரிசர்வ முகம் முதற்பாகம் | ரூ. | 0-3-0 |
| ஸ்ரீ சற்குருசுவாமிகள் கீர்த்தனம், ஷை இரண்டாம் பாகம். ... | ரூ. | 0-2-6 |
| ஸ்ரீசற்குருதிருநாம சங்கீர்த்தனம். | ரூ. | 0-2-0 |
| வேதாந்தகிளிபாடலும் கும்மியும். | ரூ. | 0-1-0 |

---o---

புத்தகங்கள் கிடைக்குமிடம்:—

ஸ்ரீசற்குரு ஸ்வாமிகள் மடாலயம்,
நாலாங்கட்டளை,
இரவாஞ்சேரி போஸ்டு,
பூந்தோட்டம் வழி.